# கோயில்களை மூடுங்கள்!



கோரநாதன்

# கோயில்களை மூடுங்கள்

ஆசிரியர் :
கோரநாதன்



சாந்தி நிலையம்
துறையூர் . . . . . திருச்சி ஜில்லா

சாந்தி நிலைய வெளியீடு 5.
(முதல் பதிப்பு டிசம்பர் 1946)
இரண்டாம் பதிப்பு மே 1947
விலை அணா எட்டு.

## சமர்ப்பணம்

சிந்திக்கும் திறனிருந்தும் சிந்தியாமல் உண்பதுவும் உறங்குவதும் உத்தியோகம் பார்ப்பதுவுமல்லாமல் 'வேறொன்றறியாப் பராபரங்கள்' ஆக வாழ்கின்ற சமுதாயத்திலே அறிவின் பிரகாசத்தைப் புகுத்தி, எல்லோரும் மனிதர்களாய் வாழ விரும்பி வழிகாட்டத் துடிக்கின்ற புதுயுகச் சிற்பிகளுக்கு.

ஊழியன் பிரஸ், துறையூர்.
Q. H. No. Ty. 40 C. 2000

# நாவலிப்பு

'ஆலயப்பிரவேசம் வேண்டும்' 'கோயில்களை எல்லோருக்கும் திறந்து விடுங்கள்' என்று சொல்லப் படுகிற இந்தக் காலத்திலே, 'கோயில்களை மூடுங்கள்!' என்று நாவலிக்கிறோம்.

அறியாமை அந்தகாரத்துக்கு, புரோகிதப் புல்லுருவித்தனத்துக்கும், சுரண்டும் செயலுக்கும் சமாதி கட்டுவதற்காகத்தான், கோயில்களுக்கே 'கோவிந்தோ கோவிந்து, கூவி-அரோகராப் போட்டு இ-மூத்து மூடும்படி எக்காளமிடுகிறோம்.

இன்றையக் கோயில்களிலே கடவுள் இல்லை. தெய்வீகம் நிலவவில்லை, சிந்தனைப் பொன்னொளி இல்லை, மனிதரை மனிதராய் வாழவைக்கும் மாண்பு இல்லை என்று சுட்டிக் காட்டுகிறோம்.

கவிஞர் பாரதிதாசருடன் சேர்ந்து நாமும் கேட்கிறோம்.

*சிந்தனைசக்தி சிறிதுமின்றி மக்களுக்குத்*
*தம்தோள் உழைப்பிலே நம்பிக்கை தானுமின்றி*
*ஊறும் பகுத்தறிவை இல்லா தொழித்து விட்டுச்*
*சாறற்ற சக்கையாய்ச் சத்துடம்பை தன்றவைத்துப்*
*பொற்புள்ள மாந்தர்களைக் கல்லாக்கியே அந்தக்*
*கற்கள் கடவுள்களாய் காணப்படும் அங்கே*
*இந்த நிலையில் சுதந்திரப் போரெங்கே?*
*கொந்தளிப்பில் நல்லதொரு கொள்கை முளைப்ப*
*[தெங்கே*

அடிமைத்தனம் ஒழிக்கப்படவேண்டுமானல், அறிவுணர்ச்சி பெறவேண்டும் மக்கள். அதற்கு ஆவன செய்யவே முதலில் 'கோயில்களை மூடுங்கள்!' என்கிறோம். மனிதரை அடிமையாக்கி, பொருளாதாரம், அறிவுத்துறை, வாழ்வு அந்தஸ்து முதலிய சகல வழிகளிலும் சமூகத்தின் பெரும்பாலோரை 'இல்லாதவர்' களாக்கி, ஏமாந்த காலத்தில் நரியூயிர்ச் சிறுதாதர்கள் ஏற்றம் கொள்ளும் துரோகச் செயலைக் குழி வெட்டிப் புதைப்பதற்காகவே கோயில்களை மூடச் சொல்கிறோம்.

கோயில்களை பாழடைய விட்டு, வெள்ளெருக்கும் வௌவாலும் செழிக்கும் இடங்களாக்குங்கள் என்று சொல்லவில்லை, மனித சமுதாய முன்னேற்றத்துக்கும் வாழ்க்கைப் புனர் அமைப்புக்கும் வழிகாட்டும் யோசனைகளையும் திட்டங்களையும் செயலாற்றத்தான் சொல்கிறோம்.

பொதுஜன சர்க்கார் இவற்றைச் செய்யலாம். செய்ய முடியும்-மனமிருந்தால். அதனுலேயே இந்தச் சந்தர்ப்பத்திலே இந் நூலை வெளியிடுகிறோம். கோயிலைச் சேர்ந்த நிலங்களை சர்க்கார் மேற்பார்வையில் எடுத்து உணவுப் பொருள்களை அதிகம் பயிரிடும் திட்டத்தில் ஈடுபடப் போகிறது என்று பத்திரிகையில் வந்த செய்தி மகிழ்வு அளிக்கிறது. அதே போல, கோயில் வருமானங்களும் பெட்டிகளில் அடைபட்டுக் கிடக்கும் நகைகளும், கல்வி அபிவிருத்திக்கும், தொழில் அபிவிருத்திக்கும், மனித குல வளர்ச்சிக்கும், பயன்பட வேண்டும் என்ற ஆசையாலேயே இந் நூலை வெளியிடுகிறோம்.

இவையெல்லாம் தமிழர் ஆட்சியில்தான் நிறைவேற முடியும் என்று காலம் நிரூபிக்குமானுல் ,தமி

முரசு ஓங்குக! தமிழினம் வெல்க!' என்று நாவலிக்கிறோம்.

'புதியதோர் உலகம் செய்வோம் கெட்ட போரிடும், உலகத்தை வேருடன் சாய்ப்போம்' என்பது சிந்தனையாளர்களின் ஆசை, கனவு, லட்சியம் எல்லாம்!

இந்த ஆசை நிறைவேறுவதற்காக சரியான திட்டங்கள் வகுக்கப்படவேண்டும். அதற்காக விழிப்புற்ற சமுதாயத்தின் முன்னின்று நாவலிக்கிறோம்:

'ஏறு ஏறு ஏறு நீ எம் கொள்கைக்கே!'

அறிவுக் கதிர் ஒளிசிதறும் புதுயுகக் கருத்துக்களில் ஒன்றுதான் 'கோயிலை மூடுங்கள்!' என்பது,

ஏன் மூட வேண்டும்? என்னென்ன செய்ய வேண்டும்?- இவை போன்ற பிரச்னைகளை இச்சிறு நூல் விளக்கும்.

கோரநாதன்



# 1. அடியுங்கள் சாவுமணி

அறியாமைக்கும் அடிமைத்தனத்துக்கும் அநாசாரத்துக்கும், அட்டைச் செயல் பெற்ற சுரண்டும் கும்பலுக்கும் சாவுமணி அடியுங்கள்.

அறிவு வளர்ச்சியை அடக்கி ஒடுக்கும் குள்ளநரிச்செயலுக்குச் சாவுமணி அடியுங்கள்.

தாம் வாழ பிறர் அறியாமையை அஸ்திவாரமாக்கி, பொருளாதார நிலையைச் சீர்குலைக்கும் புளியேப்பக்காரர்களாய் வாழும் புரோகிதத்துக்கு சாவுமணி அடியுங்கள்.

அபின்என மக்களைப் போதையில் ஆழ்த்தி மனித குலத்தை மண்ணோடு மண்ணாக்கும் அந்தகாரக் கருவூலமான மதத்துக்கு சாவுமணி அடியுங்கள்.

கடவுள், விதி, கர்மம் என்று முணமுணத்து, சோம்பேறிகளாய், போட்டுத் தேரைகளாய் புன்மைப் பூச்சிகளாய், முதுகெலும்பற்ற 'பதார்த்தங்களாய்' வாழும்படி மனிதர்களைச் செயலற்றுப் போகும்படி செய்த மடத்தனம் எதுவோ அதற்குச் சாவுமணி அடியுங்கள்.

மனிதன் தேவனை வேண்டாம். மனிதன் மனிதனும் வாழவேண்டும். அதற்கு வகை செய்யாமல், அசடர்களாய் மாற்றுகின்ற ஆரியத்துக்கு, புரோகிதப் புல்லுருவித்தனத்துக்குச் சாவுமணி அடியுங்கள்

அடியுங்கள் சாவுமணி!

புதியதோர் உலகம் காணப் புறப்பட்டோம். தயங்க மாட்டோம். விழித்தெழுந்தோம். வீறு

கொண்டோம். வீணருக்கு அடிபணிந்து அசடர்களாய் வாழவேண்டாம். சிந்தனைப் பொன்னொளியைத் திக்கெட்டும் சேர்ப்போம்.

மனிதகுலக் கறையான்களான குருக்கள்தனமும், மதபீடமும், கோவில்களும் ஒழிக! அவற்றுக்கு அடியுங்கள் சாவுமணி!

அறியாமைக்குச் சமாதி கட்டுங்கள். அடிமைத்தனத்துக்கு குழிதோண்டுங்கள். அறியாமையையும் அடிமை மனோபாவத்தையும் வளர்க்கிற ஆலயங்களை இழுத்து மூடுங்கள்!

கோயில்களை மூடுங்கள்!

# 2. நான் சொல்லுகிறேன்

கோயில்கள் வேண்டாம்.

அவை எந்த ரகமான கோயிலாக இருந்தாலும் சரி — அத்தனையும் மனிதனின் அறியாமையை விளம்பரப்படுத்துகிற தீபஸ்தம்பங்களே தவிர, ஞான ஒளிபரப்புகின்ற நிலயங்கள் அல்ல.

விவிலியம் முழங்குகின்ற மாதா கோவிலிலிருந்து ஆகாயத்தை அளாவும் கோபுரங்கள் தாங்கும் தமிழ் நாட்டுக் கோவில்கள் வரை — எல்லாம் அறியாமைக் குன்றங்கள். மனிதனை உருப்படாமல் அடிக்கும் கோட்டைகள். அறிவுச் சூன்யத்தையும் அசட்டுத் தனத்தையும், அடிமைப்பண்பையும். விபசாரத்தையும் பரப்புகிற பவனங்கள் அவை.

அவை மூடப்பட வேண்டும்.

முதலில், தமிழ் நாட்டுத் திருக்கோயில்கள் மூடப்பட வேணும்.

'ஆலயப் பிரவேசம்' என்று பேசப்படுகிறது. இன்று மனித குலத்தின் முக்கிய வளர்ச்சிக்கு 'ஆலயப் பிரவேசம்' தேவையில்லை, ஆலய மூடு விழாக்களே தேவை.

நான் சொல்கிறேன் — கோயில் உள்ள ஊரில் குடியிருக்க வேண்டாம். 'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்றது அந்தக் காலம்! அந்தச் சட்டம் எடுபடாது. தேவையில்லை. முட்டாள் தனமானதும் கூட!

சிந்தனைக்குச் சமாதி கட்டுவதேயாகும் கோயிலை வழிபடுவது. வளர்ப்பது.

கலையின் இல்லம். வேதத்தின் வித்து. ஆசாரத்தின் அரங்கம். பக்தியின் பீடம், தெய்வீக நிலையம். புனிதத்தின் பிறப்பிடம், பக்தர்கள் கூடும் இடம். பாட்டும் பரதமும் பண்புடன் மிளிரும் கலைக் கூடம். இவை தமிழ் நாட்டின் திருக்கோயில்களாம். — இன்றையக் காட்சி யல்ல. என்றோ இருந்ததாகப் பழங்கதை கூறும்.

இன்று?

அறியாமையின் அரண். சுரண்டலின் சுரங்கம். விபசாரத்தின் விளை நிலம். சோம்பரின் சொர்க்கம். கள்ளர்களின் மாளிகை. அந்தகார அரங்கம். சிந்தனையின் சாவுக்கோட்டை மூடத்தனத்தின் முதலிடம். காமத்தின் வளர்ப்புப்பண்ணை. இன்னும் எவ்வளவோ!

நாட்டின் நலம் கெடுக்கும் நச்சரங்கம் கோயில் நாசகாரக் கும்பல்கள் வைகும் பூமி அது. அறிவுக்கு உலைவைத்து, அறியாமையை பூஜிக்கச் செய்கிறது. சுரண்டலைப் போற்றுகிறது.

இத்தகைய அட்டைச் செயலின் அஸ்திவாரங்கள் மண்ணோடு மண்ணாக்கப்பட வேணும். ஏழ்மையை வளர்க்கும் எதுவானாலும் அது ஒழிக்கப்படுதல் நன்று என்பதே பொருளாதார மாந்தத்துக்கு மாற்று. கோயில்கள் ஏழைகளை ஏழைகளாகவாழச் செய்வதுடன், இன்னும் ஏழைகளாகும்படி தூண்டுகின்றன. அவை ஒழிதல் நன்று. அதற்குரிய யோசனைகள் வரையறுக்கப்பட வேண்டும்.

இன்னும் காலம் தாழ்த்துதல் நல்லதல்ல. இன்று நமக்குத் தேவையானவர்கள் சந்நியாசிகளும், மடாதி

பதிகளும் ராமநாம பஜனைக்காரர்களும் அல்ல. பட்டினி விரதமகாத்மாக்களும் அடிவருடிகளும் அல்ல. ஆத்ம முன்னேற்றம் என்று சொல்லி ஆரியத்துக்கு அடிபணியத்தூண்டும் ஆச்சார்யாக்கள்தேவையில்லை, மண்ணோடு மண்ணாகக் குனிகின்ற மக்களை மனிதராக்க வல்ல தலைவர்கள், கவிஞர்கள், இலக்கியாசிரியர்கள் தேவை, சிந்தனை ஒளி சமைக்கின்ற புதுயுக வளர்ச்சிக்காக எதையும் எதிர்த்து நிற்கத் துணிந்த வைர நெஞ்சுடையார் தேவை.

ராமதாஸர்கள் தேவையில்லை.

ராவணதாஸர்களே வேண்டும்,

விபீஷ்ணர்களும், கோபுரம் கோபுரமாய் உருவாக்கும் ராஜராஜர்களும் தேவையில்லை.

கஜினிமுகம்மதுவின் அடிச்சுவட்டைப்பின்பற்றுபவர்களே தேவை.

புதியதோர் உலகம் செய்வதற்காக: 'கெட்ட போரிடும் உலகத்தை வேருடன் சாய்ப்பதற்காக' மானுஷிகத்தின் மேன்மையை மிளிரச் செய்வதற்காக அதற்கு முதல் வேலைதான் கோயில்களை மூடுவது.

இப்படிச் சொல்லும் என்னை சமுதாயம் ஏசலாம். பக்தியற்ற பதர் எனத் தூற்றலாம். பாரதத்தின் புனிதத்தைக் கெடுக்க வந்த புல்லுருவி. தமிழகத்தின் மாண்பை மாய்க்க வந்த தறுதலை என்று சொல்லெறியலாம். எனக்கு 'ரௌரவாதி நரகம்' கிடைக்கும் எனச் சபிக்கலாம்! கவலையில்லை.

அப்படி வசைபாடுகிற தோழர்களுக்கு நான் சொல்கிறேன் —

நாம் இன்று பிள்ளைப் பூச்சிகளாய், முதுகெலும் பற்ற கோழைகளாய்ப் போனதன் காரணம் சிந்தனையை மழுக்கிவிட்ட, அறிவுக்குத் திரை போடுகிற மூடபக்தி தான்.

'மதம் மக்களுக்கு அபின்' என்றான் சிந்தனையாளன். இந்த போதை ரத்தத்திலே ஊறி மனிதவர்க்கத்தை அசக்தர்களாக்கிவிட்டது. அதை மாற்ற சிந்தனை 'இன்ஜெக்ஷன்' தேவை.

அதற்கு முக்கிய 'ஆப்ரேஷன்' தான் அறியாமையின் வளர்ப்புப் பண்ணையான, விபசார விளைநிலம், புரோகிதத்தைப் போஷித்து சுயநலமிகளை மாமிசக் குன்றுகளாக்கும் சாப்பாட்டுப் பள்ளிகளான கோயில்களை மூடுவது.

ஆம். ஆரோக்கியத்தைக் கெடுக்கும் அந்தகாரக் கோட்டைகளான ஆலயங்களை இழுத்து மூடுங்கள்!

ஏழையை இன்னும் ஏழையாக்கும், அறிவற்ற சமுதாயத்தை மேலும் அறிவற்றதாக்கும், கோயில்களை மூடுங்கள்!

அடியுங்கள் சாவுமணி — அறியாமைக்கு, அனாசாரத்துக்கு, அடிமைத்தனத்துக்கு, ஏழ்மைக்கு, சுரண்டலுக்கு, புரோகிதத்துக்கு!



# 3. நட்டகல்லும் பேசுமோ?

மனிதன் கவலைகளிலே உழன்று, வாழ்க்கைச் சேற்றிலே தறிகெட்டு வாழும் போது, ஆத்ம நலனுக்காக, பரலோக சாம்ராஜ்யத்திலே ஸீட் ரிசர்வ் செய்து கொள்வதற்குரிய 'புக்கிங் ஆபீஸாக,' கோயில்கள் ஏற்பட்டனவாம்.

உலகாயத மனப்பான்மையிலே மூக்க முழுக்க சிக்கிக் கிடக்கும் மனிதன் தன்னையும் உலகையும் படைத்ததுடன், எப்படி எப்படி வாழ வேண்டும் என்று 'தலையில் எழுதி விட்டு' 'கருப்பையுள் உயிருக்கும் கல்லினுள் தேரைக்கும்' உணவுக்குப் படியளப்பதற்காக விண்ணுலகிலே வாழும் எம்பெருமானை ஒரு நிமிஷ நேரமாவது எண்ணுவதற்காகத் தான் கோயில்கள் எழுந்தனவாம்.

அது எப்படியும் போகட்டும். இன்றையக் கோயில்கள் அப்படிப்பட்ட 'பாப காரியம்' எதுவும் செய்து விடவில்லை! மனிதர் இன்னும் அதிகமாக உலகச் சூழ்ச்சிகளை அனுபவிக்கத் தான் இடமளிக்கின்றன.

இன்றையக் கோயில்களிலே பக்தியைத் தவிர எல்லாம் உண்டு. கடவுள் என்று ஒரு புண்ணிய பதார்த்தம் இருந்தால், அந்த வஸ்துவைத் தவிர பிற வஸ்துகள் எல்லாம் கோயிலில் அகப்படும்!

கோயிலுக்குப் போகிறவர்களும் அங்கு தெய்வத்தை உணரலாம் என்றோ, பக்தியின் மோகுதலாலோ செல்லவில்லை. மற்றவர்கள் ஆட்சேபிக்கலாம். உண்மை அது தான்,

கவிஞர் பாரதிதாசன் பாடல்களில் ஒன்று. கருத்தின் களஞ்சியம் அது.

அலங்கார பொம்மைகளாய் மாதா கோவிலுக்கு மனிதர்கள் வருவானேன் என்று ஒரு பாதிரி எண்ணினராம். உத்தரவு போட்டார்.

'தங்க நகை, வெள்ளி நகை, ரத்தினமிழைத்த நகை
தையலர்கள் அணியாமலும்,
விலைதனையும் ஆடைகள் அணிந்துமே கோயில் வர
வேண்டு மென்றே பாதிரி'

விடுத்தார் ஒரு சேதி.

ஆண்களும் பெண்களும் மோட்ச சாம்ராஜ்ய ஆசார வாசலின் ஞானத்திறவுகோல் பெறக் கோவிலுக்குப் போனால், 'ஆமென்' எனப் பணிவர்.

அடிஸன் என்ற பேரறிஞன் சொன்னதல்லவா உண்மை! அவன் சொல்கிறான் — 'ஊரின் காதல் லீலைகள் செழிக்கும் அங்கே கோயிலின் மணிகள் முழங்கிய பின்னும். முன்னும்!' அதற்கு ஸாரி கட்டிய நாகரிக தர்மாமீட்டர்கள் போல் பெண்களும் ஆடம்பர பொம்மைகளாய் ஆண்களும் வந்தால் தானே ரசிக்கும்!

ஆகையினால், பாதிரி விடுத்த சேதியால் வந்தது வினை.

'விஷமென்று கோயிலை
வெறுத்தார்கள் பெண்கள், புருஷர்கள்!'

பார்த்தார் பாதிரி. 'இதேதடா எழவு! நமது பிழைப்புக்கே ஆபத்து வந்துவிட்டதே' என்று தவித்தார்.

தவித்தவர் என்ன செய்தாராம்? 'இலை போட்டழைத்தார்'. எப்படி?

'தலை காது, மூக்கு, கழுத்து, கை, மார்பு, தாள் என்ற எட்டுறுப்புகளில் மட்டுமல்ல. நீள் இமைகள் உதடு நாக்கு நிறைய நகை போடலாம்!' என்றார்.

அதற்கும் மேலாக ஒரு முத்தாய்ப்பு வைத்தார். அது ரொம்ப முக்கியம்! —

'கோயிலில் முகம் பார்க்க
நிலைக்கண்ணாடியும் உண்டென'
இலை போட்டழைத்தார்!

பக்தர்கள் வந்தார்கள் படைபடையாக. ஆனால் ஒருவர் மட்டும் வரவில்லையாம்!

'நகை போட்ட பக்தர்கள்
எல்லாரும் வந்து சேர்ந்தார்;
ஏகநாதர் மட்டும் வரவில்லையே'

இது தான் உண்மை! மாதாகோவிலில் மட்டுமல்ல. சகல கோயில்களின் தன்மையும் இதுதான்.

திருவிழா, வெறு விழா என்றெல்லாம் ஆனுப்படும் கோயில், கும்பல் முட்டி மோதும். ஆனால், அங்கு பக்தி இல்லை. பரமனும் இல்லை!

இதை நன்றாக உணர்ந்த ஒரு ஞானி பாடி வைத்தார், 'நட்ட கல்லும் பேசுமோ?' என்று. யாரோ ஒரு நாடோடிக் கவிராயர் நட்டகல்லை பெருமைப் படுத்த சிரத்தை எடுப்பதன் அடிப்படையைச் சுட்டிக்காட்டினார் இரண்டே இரண்டு வரிகளில்:

## விழுந்த கல்லு வண்ணானுக்கு
## நட்ட கல்லு பார்ப்பானுக்கு!

நட்ட கல்லிலே நாதன் இருக்கிருன் எனப் பறை யறைவது பார்ப்பனியம் - புரோகிதம். ஏன் கல்லைக் கழுவி உயிர் வாழ்வதையே பிழைப்பாகக் கொண்டு விட்ட ஒரு கும்பல் உடல் கொழுக்கும் வகை காண் பதற்காக. மதத்தின் பெயரால் கடவுளின் பெய ரால் பக்தியின் பெயரால் மக்களைச் சுரண்டுவதற் காக.

'தூணிலும் துரும்பிலும் சாமி'யென்றால் கண்ட கல்லையெல்லாம் கும்பிட்டு உய்யலாமே உயிரினங் கள்! அது கூடாது. தெய்வம் ஆவிர்த்திருப்பது யோக யாக குண்டங்களாலும் மந்திரங்களாலும் புனிதப்படுத்தப்பட்டு, அக்னி சாட்சியாக, சக்கரம் முதலியன வரைந்து கும்பாபிஷேகாதிகள் செய்து, யாருக்கும் விளங்காத வடமொழி வறட்டுத் தவளைக் கூச்சல் முழங்க பிரதிஷ்டை செய்யப்பட்ட கற் களிலே தான். அவற்றைத் தான் கும்பிடவேண்டும்' என்கிறது புரோகிதம், அதற்கு ஆஸ்திகம் மேள தாளம் தட்டுகிறது! இந்த விதமாக அறியாமைக் கொடியேற்றுவிக்கப்படுகிற கோயில்கள் வர வர பாவமாளிகைகளாக வளர்ந்துள்ளன.

கோயிலில் கலை இருக்கிறது. கலை வளர்கிறது என்றெல்லாம் சொல்லப்படுகிறது. கலை கொலை செய்யப்படாமலிருந்தால் அதுவே பெரும் பாக்கிய மாகும்!

நான் கூறுவது கட்டுக்கதையல்ல, கோயில் களின் வண்டவாளங்களைச் சிறிது ஆராயலாம்.

# 4. கலையின் சமாதி

'கோயில்கள் கலைக்கூடங்கள் என்று சொல்கிறார்கள். 'ஆகா, என்ன அற்புத வேலை! என்ன திறமை!' என வியக்கிறார்கள், சிலைகளைப் பார்த்துவிட்டு.

ஆனால், அது என்றோ ஒரு நாள் எதாவது எழுதி, போட்டோ போட்டு, புகழ்பெற விரும்பி கையில் காமிராவுடன் திரிகிற கலாரசிகன் எட்டிப் பார்க்கிற போது!

மற்ற நாட்களில்? கர்ப்பக்கிருக இருளிலே காரிருளுடன் ஐக்யமாகிக் கிடக்கும் சிலை. அதைச் செய்த சிற்பி மகத்தான கலைஞனாக இருக்கலாம். அவனது உன்னத சிருஷ்டியாக இருக்கலாம் அது. ஆனால், என்று அது மூட பக்திக்கு நிலைக்களனானதோ அன்றே கலையொளி சமாதி செய்யப்பட்டு விட்டது என்று தான் அர்த்தம்.

மறுமலர்ச்சி இலக்கியத்தின் தலை சிறந்த கதாசிரியர் புதுமைப் பித்தன் எழுதியுள்ள சிறந்த கதைகளில் ஒன்று, இதே தத்துவத்தைத் தான் வெளியிடுகிறது.

கல்லிலே ஓர் கவிதை சமைத்தான் ஒரு சிற்பி. 'குனித்த புருவமும், கொவ்வைச் செவ்வாயும், குமிண் சிரிப்பும், இனித்தங்கசிய எடுத்த பொற்பாதமும்' கொண்டு திகழ்ந்த அற்புத சிருஷ்டி. அதை கோயிலில் வைக்கப் போகிறார்கள் எனக் கேள்வியுற்ற ரசிகன் சொன்னான்; 'இந்த அசட்டுத்தனத்தை விட்டுத் தள்ளு. அரசனின் அந்தப்புர நிர்வாண உருவங்களின் பக்கலில் இதை வைத்தாலும் அர்த்தம் உண்டு. இதை உடைத்துக் குன்றின்மேல் எறிந்தா

லும் அந்தத் துண்டுகளுக்கு அர்த்தம் உண்டு. ஜீவன் உண்டு'

அவன் பேச்சு பேத்தல் எனக் கருதப் பட்டது, கும்பாபிஷேகம் நடந்தது. சிலை பிரதிஷ்டையானது. கலைஞன் பூரித்துப்போனான் மகிழ்வால் ஆனால் என்ன உணர்ந்தான் பிறகு? காலப் போக்கிலே அவனது கலா சிருஷ்டி பெற்ற நிலைமையைப் பற்றி அவன் கனவிலே கண்டதென்ன ?

'ஒரே கன்னக் கனிந்த இருள்! ஹிருதய சூன்யம் போன்ற பாழ் இருட்டு!

இருட்டின் கரு போன்ற இடம். அதில் மங்கிய தீபவொளி தோன்றுகிறது. என்ன! இதுவா பழைய சிலை! உயிரில்லை! கவர்ச்சிக்கும் புன்னகையில்லையே! எல்லாம் மருள்!... மருள்!

அந்தகார வாசலில் சாயைகள் போல உருவங்கள் குனிந்தபடி வருகின்றன. குனிந்தபடி வணங்குகின்றன,

எனக்கு மோட்சம். எனக்கு மோட்சம் என்ற எதிரொலிப்பு. அந்தக் கோடிக் கணக்கான சாயைகளின் கூட்டத்தில் ஒருவராவது சிலையை ஏறிட்டுப் பார்க்கவில்லை! இப்படியே தினமும்...

நாட்கள், வருடங்கள், நூற்றாண்டுகள் அலை போல் புரளுகின்றன. அந்த அனந்த கோடி வருடங்களிலே ஒரு சாயையாவது ஏறிட்டுப் பார்க்கவேண்டுமே —

எனக்கு மோட்சம்! – இது தான் பல்லவி, பாட்டு எல்லாம்!

எத்தனை யுகங்கள்! அவனுக்கு வெறி பிடிக்கிறது. 'உயிரற்ற மோட்சச் சிலையே! உன்னை உடைக்

இறேன்! போடு! உடை! ஐயோ. தெய்வமே! உடைய மாட்டாயா! உடைந்துவிடு! நீ உடைந்து போ...!'

புதுமைப் பித்தனின் 'சிற்பியின் நரகம்' கூறும் சிற்பி சாத்தனைப் போலவே, எல்லாச் சிற்பிகளும் தங்கள் கலா சிருஷ்டிகளின் நிலையை உணர்ந்து புழுங்குவார்கள்; சபிப்பார்கள் என்பதில் சந்தேகம் வேண்டாம்.

கோயில்கள் கலையின் சமாதிகளாகிவிட்டன. கர்ப்பக்கிருக இருள் தான் அங்கு சாமி கும்பிட வருவோர் மனத்திலும் பார்வையிலும்! அவர்கள் கலையைப் பற்றி என்ன கண்டார்கள் ?

பழந் தமிழ் மன்னர்கள் கலைஞர்களைக் கௌரவித்தார்கள். ஆனால் கலையை சமாதிகட்டி வைத்து விட்டார்கள்! அவர்கள் நினைவு நல்லெண்ணமே. ஆனால் விளைவுதான் விபரீதமாயிற்று.

திறமை பெற்றும் உழைப்புக்குத் தக்க கூலியும், மதிப்பும் பெறாத கலைஞர்களின் திறமையை ஊக்குவிக்க மன்னர்கள் கோபுரங்களையும், கல் தூண் மண்டபங்களையும் கட்டப் பணித்தார்கள். கலா சிருஷ்டிகளைப் படைக்கத் தூண்டினார்கள். கலைஞர்களின் கைத்திறனை சக்தியை எல்லோரும் வந்து பார்க்கட்டும் எனப் பணித்தார்கள். மக்கள் வந்தார்கள். கலையின் சௌந்தர்யத்தைக் கண்டு, மனித சக்தியை வியக்கும் ரசனை அவர்களிடம் இல்லை. அமானுஷிக சக்தி என எண்ணித் தலை வணங்கினார்கள். விழுந்து கும்பிட்டார்கள். பிறகு; தலை குனிந்து கும்பிட்டு வரம் கேட்பதே வேலையாயிற்று. கலை காரிருளில் சிக்கியது.

சிற்பக் கலைக்கு மட்டுமல்ல இந்தக் கதி. சகல கலைகளுக்கும் நேர்ந்த விபத்து இதுதான். தேவ அடி

யார்களாக கலைக்கே தம் வாழ்வை அர்ப்பணித்த, ஆடல் வல்ல மங்கையர் ஆடவரின் காமயந்திரங்களாக மாறினர் காலப் போக்கிலே. அன்றிருந்து, கோயில்கள் விபசாரக்கூட மாயின.

நாதஸ்வரமும் இன்னிசைக் கலைகளும் வளர நிர்மாணமான இடம் சம்பிரதாயத்துக்காக சகிக்கமுடியாத ஊதல்களும், எருத் தட்டல் போன்ற இசைத் தட்டல்களும் ஒலிக்கும் இடமாயிற்று! இன்றையக் கோயில்களின் நிலை இது.

கலை வளர்க்க மானியம் பெற்று வாழ்ந்த ஆடல் நங்கைகளும், பாடல் பயில்வரும், இசை வல்லாரும் ஏதோ 'அத்தக் கொத்து' பெற்று கடனுக்கு மாரடித்த கணக்கிலே 'ஒப்பேத்து வியாபாரம்' செய்து வருகிறார்கள். 'சின்ன மேளம்' என்கிற பரதநாட்டியம் இப்பொழுது சந்நிதானங்களில் ஆடப்படுவதில்லை தினமும்.

ஆனால், செட்டிநாட்டுக் கோயில்களில் தினந்தோறும் இந்த அம்சமும் பூஜைவேளை புரோகிராம்களில் ஒன்றாக ஒழுங்காக நடைபெறுகிறது. அதற்காக உள்ள அம்மாள் சன்னதியில் நின்று கையையும் காலையும் உடலையும் ஆட்டி அசைப்பதைப்பார்த்தால் 'இவளுக்கு இந்த காக்கா வலிப்பு ஏன் வந்தது! ஐயோ பாவமே' என்று இரங்கத்தான் வேண்டியிருக்கிறது.

சில கோயில் பிரகாரச் சுவர்களில் கலை ஓவியங்கள் தீட்டப்பட்டு பின்னர் ஞான சூனியங்களால் மேல் பூச்சுப் பூசி சமாதி செய்யப்பட்டிருப்பது உண்டு, அக் கலாநயங்களைக் காணப்போவதற்கு முன் நடமாடும் குட்டி தேவதைகளை — அதிகாரப் பூசாரிகளை — தாஜா செய்தாகவேண்டும், போனா

லும், இருட்டில் ஒரு எழுவும் தெரியாது சிறிது வெளிச்சம் போட்டாலும், மூளியும் மூங்கறையுமான சில வர்ணப் பூச்சுகள் தான் மிஞ்சியிருக்கும். அவற்றை ஒட்டி ஆயிரத்தெட்டு 'அளப்புகள் 'விடத்தயங்க மாட்டார் புரோகிதர். அவருக்கு 'ஸம்திங்' பெற்றாக வேண்டுமே! அதற்குத்தான்.

இந்த மாதிரியாக கலையின் சமாதிகளாகிவிட்ட கோயில்களை அந்தகார நிலையங்களாக இன்னும் விட்டு வைப்பானேன்.

பழந் தமிழர் பெருமையை கூறுவதைவிட இன்றைய மனித சமுதாயத்தின் அறியாமையை, இழி நிலைமையைத்தான் சுட்டிக்காட்டுகிறது கோயில்.

சிந்திக்க வல்லார் கேட்டால் சிரித்துத் துப்பக் கூடிய சிறுமைகள் பக்தியின் பெயரால் வளர்கின்றன கோயில்களில்!

# 5. கடவுள் கடவுளென்று கதறுகின்ற கயவர்காள்!

'மனிதனது கற்பனைகளில் மகத்தானது கடவுள் ஆகும்' என்பது உலகத்தின் சிறந்த சிந்தனையாளனான இங்கர்சாலின் கூற்று. அது தான் உண்மையும் கூட.

தனது வாழ்வின் தன்மையை உணர இயலாத மனிதன், நிலையற்ற எதிர்காலத்தையும் வலி மிகுந்த இயற்கைச் சக்திகளையும் எண்ணி அஞ்சிய மனிதன், தனது மனஅரிப்பை அடக்க ஒரு போதையின் உதவியை நாடினான். உண்மையை மறக்கடித்து மயக்க நிலையிலே தள்ளுகிற அந்த போதைதான் கடவுள் நினைப்பு.

'எல்லாம் கடவுள் செயல்' என்று கடவுள் தலையில் பாரத்தைப் போட்டுவிட்டு பயமில்லாமல் வாழலாமே! அதற்குத் தான். முதலில், தங்களை விட வலிய சக்திகளை எல்லாம் அவை மிருகங்களாயினும் சரி, ஊர்கின்ற ஜந்துக்களாயினும் சரி-கடவுள் என விழுந்து கும்பிட்டான். நாகத்தையும், சிங்கத்தையும் கும்பிட்டது போலவே, அழிக்கும் தன்மை பெற்ற தீயையும் தண்ணீரையும் பிறவற்றையும் அஞ்சி வணங்கினான். அடுத்தவன் செத்ததைக் கண்டதும் ஏற்பட்ட அச்சத்தால், தான் சாகாமலிருப்பதற்காக மரணத்துக்கு ஒரு தெய்வம் என நியமித்தான். அதாவது, ஆதிமனிதன் எண்ணப்படி, அவன் அறிவு எல்லைக்கு அப்பாற்பட்டதெல்லாம், அவனால் புரிந்து கொள்ள முடியாத அமானுஷிக சக்தி எல்லாம் கடவுள் தன்மை பெற்றவை ஆயின.

அறிவு ஆரம்பநிலையிலே இருந்த அந்தக் காலத்திலே விதைக்கப்பட்ட இந்த நினைவுகள் வரவர விஸ்வரூபம் எடுத்தன. அத்துடன் கற்பனை மெருகும் ஏற்றன.

மரத்தடியிலும், கண்ட கண்ட இடங்களிலும் விழுந்து கும்பிட்டு ஆடிப்பாடும் காட்டுமிராண்டித்தனம் குறிப்பிட்ட ஓர் இடத்தில் பக்திபண்ணுவது என்ற நிலைக்கு வந்தது. சிந்தனை வேரோடி கொஞ்சம் கொஞ்சமாகத் தளிர்த்து, மனிதர்கள் தங்கள் வசதிகளுக்காகவும் தேவைகளை கவனிப்பதற்காகவும் கும்பல் கும்பலாக வசிக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஒவ்வொரு கும்பலுக்கும் ஒரு தலைவன் ஏற்பட்டது போலவே, தெய்வ வழிபாட்டுக்கென்று பூசாரிகளும் தோன்றினார்கள். தாங்கள் புரிந்து கொள்ளமுடியாத அமானுஷிக சக்தியிடம் மக்கள் கொண்டுள்ள பயபக்தியை தங்கள் நலனுக்கு உபயோகித்துக் கொள்ளலாம் என்று இலகுவில் கண்டு கொண்டார்கள்.

மனித பலவீனத்தை முதலீடாக்கி தங்கள் சுய வியாபாரத்தைப் பெருக்கத் திட்டமிட்ட புரோகிதர்களின் ஆசை வெற்றிகரமாகவே நிறைவேறி வந்திருக்கிறது என்பதை சரித்திரம் கூறும். வருகிறது என்பதை சமூகநிலை காட்டும்.

மக்கள் தனித்தனிப் பிரிவுகளாக வாழ்ந்து தலைவர்களுடன் இருக்குங் காலத்தில் பூசாரிகளும், உளர வளர பிறர் அறியாமையை வளர்த்து தங்கள் அறிவைப் பெருக்கி பெருவாழ்வு வாழ்ந்த புரோகிதர்களும், குறுநில மன்னர்களும், பெருநிலக்கிழவர்களும் ராஜராஜர்களும் தோன்றத்தோன்ற குருக்கள், ராஜகுரு என்ற தோரணையில் ஆஷாடபூதிகளும் வாழ்ந்து எவ்வளவு தூரம் மனித சமுதாய வளர்ச்சியையே

பாதித்து வந்திருக்கிறார்கள் என்பதை ஒவ்வொரு நாட்டுச் சரித்திரமும் சுட்டிக்காட்டும்.

கடவுள் பூஜைக்கு என வந்த புரோகிதவர்க்கம் மனித அறியாமையை அகண்டதாக்கியது. மரணத்தின் பின் மனிதநிலை யாது என்று புரிந்து கொள்ளாதவர்களிடையே, சொர்க்கம் நரகம், எம தண்டனை பாப புண்ணியம் என்றெல்லாம் கதைத்து, தங்களைத் தாங்களே பரலோகத் தபால் பெட்டிகளாக நியமித்துக்கொண்டு பொருளும் பணமும் சுரண்ட ஆரம்பித்தது. சுரண்டி வருகிறது.

மதத்துக்கு மக்களிடமுள்ள அபிமானத்தை அடிப்படையாக்கி, தாங்கள் செல்வாக்குப் பெற்று ராஜீய விஷயங்களில் தலையிட்டு தங்களை ராஜாக்களை ஆட்டிவைக்கும் ராஜாக்களாக்கிக் கொண்டு அந்தப்புர சுந்தரிகளையும் தங்கள் கைப்பாவைகளாக மாற்றிக் கொட்டமடித்த குருக்கள்கள் எண்ணற்றோர் உண்டு. இப்பொழுதும் இருக்கிறார்கள். இது கிடக்க.

குறிப்பிட்ட சில இடங்களில் தான் தெய்வம் தொழவேண்டும் எனச் சட்டமியற்றியது புரோகித வர்க்கத்தின் சுயநலமே ஆகும். குறிபிட்ட சில இடங்களில் குறித்த ஒரு வகுப்பினரே பூஜை பண்ண உரிமை பெற்றவர்கள் என்று திட்டமிட்டதே இதை வலியுறுத்தும்.

இந்த ஏற்பாட்டின் மூலம் பொருளாதாரச் சுரண்டலுடன் தாங்களே உயர்ந்தவர்கள். தாங்கள் வழங்கி வருவதே தேவபாஷை, பிறர் அந்த பாஷையை கற்கக்கூடாது, வேதங்கள் தங்கள் சமூகத் தனி உரிமை என்று சொல்லி அறியாமையையும் போஷித்து வந்தனர் புரோகிதர்.

மக்கட்குலத்தில் சிந்தனை விழிப்பு ஏற்பட, ஏற்பட புரோகிதர்களின் வீண்மாய்மாலவார்த்தைகளின் உண்மைத் தன்மை அம்பலத்துக்கு வரலாயிற்று. ஏமாந்தவர்களைப் பயன்படுத்திக் கொண்டு தாம் ஏற்றம் பெற எண்ணுகிற புரோகிதக் கும்பலின் சுய நலம் சமாதியில் அடக்கப்படவேண்டும் என்று கர்ஜிக்கும் சிந்தனையாளர்கள் — சீர்திருத்தக்காரர்கள் — சொல்லாலும் செயலாலும் சமுதாயத்திலே விழிப் பேற்படுத்தி வருகிறார்கள்.

கடவுள் என்கிற தத்துவம் ஆதியில் அஞ்சிநடுங்கிய மனிதனின் அறியாமை சிருஷ்டித்த ஒன்று. காலப்போக்கிலே மனித மனோபாவம் அதில் பற்றுக் கொண்டு கடவுள் தத்துவத்திற்கு கற்பனை மெருகு தீட்டிப் பூஜிக்கத் தொடங்கியது. அத்துடன் சுய நலக் கும்பல் தாங்கள் பெருமை அடைவதற்காக குள்ளநரிச் செயல்கள் புரிந்தது. புராணங்கள் என்றும் லீலைகள் என்றும் அளந்தனர். எதற்காக? ஏமாற்றி காசு பறிப்பதற்காக, லீலாவிநோதக் கடவுளர்களும், அவதாரங்களும் தங்கள் கனவிலே தோன்றிப் பேசும்; தாங்கள் கடவுளரின் பிரதிநிதிகள் என்று பம்மாத்துப் பண்ணி பணம் பிடுங்குவதற்காக. இது எவ்வளவு தூரம் உண்மை என்பதை இன்றையக் கோயில்கள் சம்பந்தமான கட்டுக் கதைகளும், ஸ்தலபுராணங்களும், கடவுளரின் லீலா விநோத ஏடுகளும் எடுத்துக் கூறும்.

மனிதன் தன்னைப் போலவே கடவுளைப் படைத்துக்கொண்டான், தனக்கு மனைவி, மக்கள் வீடு, நகை முதலியவற்றில் ஆசை இருப்பதுபோலவே கடவுளுக்கும் இருக்கும் என்று இறைவனுக்கு பெண்டாட்டி பிள்ளைகள் ஏற்படுத்தினான். பெரிய பெரிய மாளிகைகள் கட்டிக்கொடுத்தான். பாலாபிஷேகமும் பிறவும்

செய்கிறுன், ஆடம்பர நகைகளும் பட்டு பீதாம்பரங் களும் அணிவிக்கிறுன்.

கடவுளர்கள் தாசி வீட்டுக்குப் போவதாகவும், திரும்பி வந்ததும் அம்பிகை கோபித்துக் கொண்டு கதவடைப்பதாகவும், அவர் கெஞ்சுவதாகவும் திரு விழா நடைபெறுகிறது. வருஷந்தோறும் திருக்கல் யாணம்! திருவிழாக்கள்! இவை எல்லாம் பக்தியின் விளைவா? கேலிக் கூத்தா? எள்ளி நகையாடப்பட வேண்டிய பித்தலாட்டமா? சிந்தித்துப் பாருங்கள்.

இந்த 'விளையாட்டு' எவ்வளவு தூரம் வளர் கிறது என்பது கோயிலில் நடைபெறும் தினசரி நிகழ்ச்சிகளைக் கவனித்தால் விளங்கும். வேளை தோறும் பூஜை நடத்துவது போல, சாமிக்கு இர வில் காம பூஜையும் தேவை போலும்! அதற்காக பள்ளியறை—சம்பிரதாயமான அலங்கார், ஆகாராதி களுடன்-கொலு நிர்மாணிக்கப்படுகிறது. சாமியை யும் அம்மனையும் படுக்கப் போட்டு, கதவை இழுத் துப் பூட்டிவிடுவதுடன் அர்த்தஜாம பூஜை முடிவடை கிறது.

இது தான் பக்தியா?

வைஷ்ணவ ஆலயங்களில் ஓர் சம்பிரதாயம் உண்டென அறிகிறேன். இரவில் பள்ளியறையில் படுத்த கடவுள் தம்பதிகள் திருப்பள்ளி எழுந்ததும் பூஜை நடைபெறும்! அப்போது, பெருமாளுக்குப் பின் புறம் ஒருவகை 'பிரசாதம்' வைத்து பூஜைமுடிந் ததும் வினியோகிக்கப்படும். இதற்குப் பொருள் 'திருக்குண்டிப் பிரசாதம்' என்று வைஷ்ணவ அன் பர் ஒருவர் விளக்கினுர்.

சல்லித்தனமான இந்தக் கற்பனை தினசரி சம்பிர தாயமாக உலவும் இடங்களிலே தெய்வீக நினைவு

களுக்கு இடம் ஏது? அப்படியிருக்கும் போது ஆல யங்கள் பக்தியின் நிலைக்களன் எனக் கூறப்படுவது அர்த்த மற்றது இல்லையா?

இவற்றை ஆராய்ந்தால் என்ன தெரிகிறது? சிறுவர்களாக இருக்கும்போது ஓட்டு வில்லையையும், கல்லையும் வைத்து சாமி விளையாட்டு நடத்தும் பண்பு வயதுக்கு ஏற்ப கற்பனை வளர்ச்சியுடன் முதிர்ச்சி பெற்றிருக்கிறது. ஆகவே பக்தி என்ற போர்வை யில் பெரிய மனிதர்கள் விளையாடும் பொழுதுபோக்கு ஆட்டம் தான் கோவில், சாமி, திருவிழா வகையராக் கள்.

அதுமட்டுமல்ல, ஆடம்பரமான, ஏராளமான பொருளுக்கு உலைவைக்கிற அர்த்தமற்ற விளையாட்டு!

சாதாரணமாக குழந்தைகள் சாமிவைத்து விளை யாடும் பொழுது 'அரைக்கழுதை வயசாகியும் சாமி விளையாட்டா?' என்றுசீறுகிற சமூகம், முழுக்கழுதை ஒண்ணரைக் கழுதைகள் வயசாகியும் கூட சாமி விளையாட்டு விளையாடும் பெரிய மனிதர்கள் நிறைந் ததாகவே இருக்கிறது!

திருவிழாக் காலங்களில் எவ்வளவு கால, பொருள், உழைப்பு பாழாகிறது என்பதை எண்ணிப் பாருங்கள். எவ்வளவு பால், இளநீர், பழம் முதலிய உணவுப்பொருள்கள் வீணாகின்றன என்பதைச் சிந்தியுங்கள். நவராத்திரி காலத்திலும், மற்றும் விசேஷ காலங்களிலும் அழகுக்கொலு என ஆடம் பரம் செய்து பணம் பறிப்பது எத்தகைய விளை யாட்டு என்பதை சிந்தித்துப்பாருங்கள்.

இவை இன்னும் நீடிக்கலாமா? அறிவு வளர்ச்சி பெற்று வரும் இன்று இவை அறியாமையின் சின்னங் களாக பிறரின் நகைப்புக்கு இலக்காக, விளங்கு கின்றனவே. அது மனதில் தைக்கவில்லையா?

தெய்வம் குடியிருக்கும் திருக்கோயில்களிலே பக்தியை தவிர மற்ற எல்லா உணர்ச்சிகளும் நிலவுகின்றன. காமம் தலைவிரித்து நடனமாடுகிறது. டம்பம், ஆணவம். அதிகாரம் எல்லாம் 'கச்சைக்கால்' கொட்டுகின்றன அங்கே. இந்நிலை மாற வேண்டும் கடவுள், கடவுள் என்று கண்ணைக் கட்டிவிட்டு ஒரு சிலர் உயர்வதை அறிவுலகம் சகித்துக்கொண்டிருக்க முடியாது.

இதற்கு ஒரே ஒரு மாற்றுதான் உண்டு. 'கோயில்களை மூடுங்கள்!' என்பதே அது.

---

# 6. இதுதான் பக்தியா?

கடவுள் தத்துவம் மனித உணர்ச்சிகளையும் ஆசைகளையும் மன அரிப்புகளையும் அடக்க – வாயாரப் புலம்ப வகைசெய்யும் போதை என்றேன்.

இது விளக்கப்படவேண்டிய விஷயம். பக்தி, பக்தி என்கிறார்கள். ஆனால் பக்த குழாங்களின் சொல்லும் செயலும் அதை நிரூபிப்பதாயில்லை. கோயில்களில் கும்பல் கூடுவது பக்தி பண்ணுவதற்காக மட்டுமல்ல

பத்தியால், அடக்க இயலாத் தெய்வ நினைப்பால் கோயிலுக்கு வருபவர்கள் ஐந்து சத விகிதம் பேர்கள் கூட இராது. அதுவும் கிழடு கட்டைகளே ஆகும். இன்னும் பலர் கோயிலுக்குப் போவதை ஏதோ ஒரு கடனாகக் கருதிச் செய்பவர்கள். வேளா வேளைக்குச் சாப்பிடுவது போல இரவானதும் கோயிலுக்குப் போய் சுற்றிவிட்டு வரவேண்டும் என்ற பழக்கம், இவர்களிடையே உறைந்துள்ளது. இவர்கள் மனதில் பக்திக்குப் பதிலாக குடும்பக் கவலைகளும், உலகாயத எண்ணங்கள், ஆசைகள், கனவுகளே மண்டிக் கிடக்கும். இந்நிலையில் பக்திக்கு இடமேது?

வேறு சிலர் 'சும்மா' நேரம் போகவில்லையே என கோயிலுக்குப்போவார்கள். கோயிலுக்குப் போனால் 'அடுத்த தெரு அவாளையும், இந்த வீட்டு இவாளையும்' பார்க்கலாம் வம்பளக்கலாம் எனப் போவோரும் உண்டு. அங்கு வரும் அம்பிகைகளின் 'தரிசனார்த்தம்' போவோர் அநேகர். கோவிலின் இருட்டிலே காதல் பண்ணும் நினைவுடன் போகிறவர்கள் உண்டு. இப்படி எவ்வளவோ ரகங்கள்!

வைஷ்ணவர் கோயில்களில் திருவிழா காலத்தில் சப்பரங்களின் முன்னாலும், சாதாரண நாட்களில்

கோயில்களிலும் வறட்டுத் தவளைகள் மாதிரி கத்திக் கொண்டு பலர் கூச்சலிடுவது பக்தியினுலா? ‘பல் லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு’ என்று பாடுவதே புரியாதபடி கத்தும் இவர்கள் ‘உண்டக் கட்டிக்’கும் ரெண்டு தோசைக்கும் தான் இப்படித் தொண்டைத் தண்ணீரை வற்ற வைக்கிருர்கள்!

பக்தர்களைப் பற்றிக் கூறியதும் பக்த சிகாமணி களின் பக்திப் பாடல்களைப் பற்றிச் சொல்லவேண் டியது அவசியமாகிறது. கடவுளின் அன்பைப் பெற பக்தர்களுக்கு சுருக்கு வழி தெரியும்! அது தான் அந் தப்புர தர்பாரை அணுகுவது!

ஆபீசர்களின் தயவை நாடுவோர் ஆபீசர் வீட்டு ‘அம்மாக்கமார்களுக்கு’ நல்ல பிள்ளைகளாகி விடுவது பூலோக வழக்கம். காய்கறிகள், குழந்தைச் சாமான் கள் இப்படி அந்தப்புரத்துக்கு ஏற்றுமதி செய்து, எஜமானியம்மாளின் கருணைகடாட்சம் பெற்று விஷ யத்தைக் கூற, அம்மாள் எஜமான் காதில் போட்டு சிபார்சு செய்வது ஒரு சம்பிரதாயம். இந்த மாமூல் பிரகாரம் பக்தர்களும் செய்திருக்கிருர்கள்!

ஆனுல் ஸ்ரீலஸ்ரீ கடவுள் அனுதாபத்துக்கு உரிய வராகிருர்! என்ன? சாதாரண மனிதன் கூட, அய லான் தன் மனைவியைப் பற்றி வர்ணிக்க ஆரம்பித் தால் சகிப்பதில்லை. அவளை பிறர் உன்னிப்பாய் கவ னிக்கிருர்கள் என்று தெரிந்தால் அவனுல் பொறுக்க முடிவதில்லை. ஆனுல், பக்த சிகாமணிகள் என்ன செய்கிருர்கள். அம்பிகையின் அங்க வர்ணனை பண்ணுகிருர்கள்! தாராளமாக வார்த்தை உதிர்க்கி ருர்கள். கொங்கை வர்ணனை செய்கிருர்கள் பாடல் பாடலாக! அம்பிகையின் அல்குல் அழகை வாயாறப் புகழ்கிருர்கள். அப்படிப்பட்ட அங்கங்களையுடைய

வளின் அன்பனே, அப்பனே என வியக்கிறார்கள். இது தான் பக்தியா ?

இந்தப் பாடல்களைப் படிப்பவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் காம நினைவுதான் எழுகிறது.

இத்தகைய வர்ணனை விஷயத்திலே அருணகிரி நாதர் அசகாய சூரர் ! கட்டிலிலேறி கன்னி மன மறிந்து அரசிலே வருடும் அற்புதம் வரை அபாரமாகப் பாடித் தள்ளிவிட்டார், இதை பெண்கள் விழுந்து விழுந்து படிக்கிறார்கள். இப்பாடல்களை விரிவுரை செய்து சொல்மாரி பொழிய ஒரு பிரசங்கி.

பிரசங்கத்துக்கு நூறுரூபாய் பெற்றுக்கொண்டு கூட்டம் கூட்டுவார். ஒருவரிக்கே ஒன்பதுமணிநேர வியாக்யானம் சுவையாகச் செய்வார். தங்கம் டாலடிக்கும் ருத்திராக்ஷ மாலை புரள பல்லெல்லாம் பளபளக்க அவர் கும்பலில் கூடியுள்ள பெண்கள் பக்கமே பார்த்துப் பார்த்துச் சிரித்துச் சிரித்து சொல் மாரி பொழிவது கோயில்களில் நடைபெறும் திருப் பணி. தமிழ்ப் பணியாம் ஐயா இது! இது தான் பக்தியா?

திருவிழாக் கும்பல்களில் செக்ஸ் பேதங்கள் எங்கோ பறந்துவிடும். பெண்களே துணிந்து ஆண்கள் மேல் உரசிக்கொண்டு குதித்து ஓடுவது சர்வ சாதாரணம். இந்தப் பேரின்பம் பெறுவதற்காகவே சாமி கும்பிட வரும் பக்தர்களுக்கு கணக்கே கிடையாது! இந்த வேட்டையும், கண்வெட்டுகளும் வெற்றி கரமாக வளர்ந்துவிட, இரவில் கோயில் பிரகாரங்கள், இருளடைந்த மூலைகள், ஒதுக்கிவிட்ட சில்லறைச் சாமிகள் குடியிருக்கும் இருட்டறைகள் முதலியவை இன்பம் நுகரும் வேட்டைக்காரர்களின்

பள்ளியறையாக மாறிவிடுகின்றன! இன்று எல்லா ஊர்க்கோயில்களிலும் சகஜமாக நடைபெறுவது இது.

கோயில்களில் உள்ள தாசிகள் தங்கள் உடல் விற்கும் தொழிலை வளர்க்கும் வியாபாரஸ்தலமாக நம்பியிருப்பது கோயிலைத்தான். பூஜைவேளைகளில் அங்கு வந்து நின்றுகொண்டு பக்தர்கள் மேல் கண் வலை வீசி இழுப்பது நடைமுறை பக்தர்களுக்கு 'உதவி புரிய' அர்ச்சகர்கள் முன் வருவதுண்டு! அவர்களுக்கு கமிஷன். 'கிராக்கி' இல்லாத இரவுகளில் அனுபவ பாத்தியதை! இப்படி கூட்டு ஒப்பந்தம் அவர்களுக் கிடையே!

கோயிலுக்கு வரும் அழகிகளை பின்தொடர்ந்து கிண்டல் செய்வதில் பல இளைஞர்களுக்கு தனி ஆனந்தம். அதற்காகவே எவ்வளவோ பேர் கோயிலுக்கு வருவதுண்டு. பெண்களைப் பார்த்து கண்ணடிப்பது சிரிப்பது தங்கள் நண்பர்களிடம் பேசுவதுபோல் அங்கவர்ணனை பண்ணுவது, பிரகாரங்களில் துரத்தி வேட்டையாடுவது-இப்படியெல்லாம் நடைபெறுகின்றன கோயிலில்.

## இது தான் பக்தியா?

இன்று கோயில்கள் காமக்கேளிக்கை நிலையங்களாகத் திகழ்கின்றன; வியாபாரத்தின் வளர்ப்புப் பண்ணைகளாக வளர்ந்துவிட்டன என்பதற்கு மேலே குறிப்பிட்ட செயல்கள் சகஜமாக மலிந்து விட்டதே காட்டும். இவற்றை அறிய ஆராய்ச்சி ஒன்றும் தேவையில்லை. சும்மா பார்ப்பவர்கள் பார்வையிலே கூட இவை தாராளமாகப்படும், இத்தகைய செயல்கள் 'தண்ணிபட்ட பாடுதான்' ஆலயங்களில்.

இந்த நிலையை ஏன் நீடிக்கவிடவேண்டும்? பக்தியின் பெயரால் பாதகங்கள் நடைபெற அனுமதிப்பானேன்? அவை நடைபெறும் நாடகமேடைகளாகக் கோயில்கள் விளங்குவதைவிட, கோயில்களை வேறு உயர்ந்த லட்சியங்களின் ஸ்தலங்களாக மாற்றுவதல்லவா அறிவுடைமையாகும். அதற்கு அஸ்திவாரமிடுவதுதான், கோயில்களை மூடுங்கள் என்று சொல்வது.

# 7. ஆரோக்கியத்திற்கு இருட்டடிப்பு!

மன அமைதி பெறுவதற்கென ஏற்பட்ட புனித நிலையங்கள் ஆலயங்கள் என்று சொல்லப்படுவதுண்டு. கோயிலுக்கும் புனிதத்துக்கும் ரொம்ப தூரம் என்பது தான் நடைமுறையில் காணும் உண்மை. பரிசுத்த பூமியான பகவத் சன்னிதானத்திலே உளத் தூய்மை இல்லை என்பதைச் சொன்னேன். அங்கு புறத் தூய்மையுமில்லை தான்!

கோயில்களில் ஓர்விதமான புனித வாசனை நிலவுகிறது. கர்ப்பக்கிரகத்தின் முன் மண்டபத்தில் நின்றாலே அந்தச் சூழ்நிலையால் ஒருவிதப் பரவசம் ஏற்படுகிறது என்று சிலர் சொல்கிறார்கள் கோயில்களில் நிலவும் மணம் எத்தகையது? தூய காற்றோட்டமில்லாத புழுக்கம். அந்தக் கதகதப்பிலே எழும் மனித தேக வாடை...... மனித மூச்சு...... வியர்வை... கோயில் விளக்குகளில் களிம்பேறிப் போன எண்ணெய் வாசனை .. சிலைகளை அபிஷேகம் செய்த நீரின் மணம்... இவற்றுடன் கலக்கும் சாம்பிராணி, ஊதுவத்திப் புகை... பூக்களின் வாசனை... இவற்றுக்கெல்லாம் மேலாக, கோயில்களின் நிரந்தரப் பிரஜைகளான வௌவால்களின் கைங்கர்யம்! - இவ்விதமான புழுக்கத்திலே மூச்சு முட்டுவது போன்ற உணர்ச்சிதான் எழுகிறது. சிறிது அதிகமாகவே அங்கு நின்றால் மயக்கம் தான் ஏற்படும்! இந்தச் சூழலை ஆரோக்கிய ஸ்தலம் என்று எப்படிச் சொல்வது!

சிலைகளுக்கு அபிஷேகம் செய்த நீரை - எண்ணெய்ப் பசை, மஞ்சள் பிசுக்கு, தண்ணிப் பால், நீர் இப்படியான ஒரு குழம்பை - புண்ணிய தீர்த்தம் என்று விநியோகம் செய்கிறார்கள் பெரும்பாலான

இடங்களிலே. அதை இரு கை ஏந்தி பவ்வியமாகப் பெற்று கண்ணிலும் தலையிலும் தெளித்துக்கொள்வதுடன் பருகவும் செய்கிறார்கள் பக்த சிகாமணிகள்! இந்தத் தீர்த்த விநியோகம் பாபத்தைப் போக்கடிக்காவிட்டாலும், வியாதிகளை ஏற்றுமதி செய்யாமல் இருந்தாலே பெரும் புண்ணியம் தான்!

இந்த அபிஷேக நீர் அதற்கென அமைந்த தொட்டியில் தேங்கிக் கிடந்து காடியாய்ப் புளித்து சாக்கடையாய் நாறுவது உண்டு. அந்த நாற்ற அலைகள் தூரத்தில் வருவோரின் நாசியைப் பதம் பார்க்கும். பக்திப் பெருக்கால் கண்மூடித்தனமாக அந்த நீரைத் தொட்டு கண்களில் அப்பியும் தலையில் சிதறியும் புண்ணியம் சம்பாதிக்கும் ஜந்துக்களைப் பற்றி என்னதான் சொல்வது?

இந்தத் தீர்த்தத்துக்கு 'அண்ணன்' தான் கோயில்களில் விநியோகிக்கப்படும் சந்தனம். அது சந்தனமா! கோலப் பொடியைப் போட்டு கட்டையுடன் அரைத்தெடுத்த ஒரு பதார்த்தம், அதில் வாசமும் இராது. ஒரு எழவுமிராது! ஆனால், அதை பய பக்தியோடு வாங்கி தேகத்தில் வெள்ளையடித்துக் கொள்ளவேண்டுமாம்! அப்படிச் செய்யாதவர்கள் பரிகாசத்துக்கு உள்ளாகிறார்கள்.

இன்னுமொரு வழக்கம் இருக்கிறதே – பட்டுக் கட்டி மாலை போட்டு, கிரீடம் கவிப்பது! திருவருட்பிரசாதம் கிடைக்குமோ கிடைக்காதோ, அது வேறு விஷயம்! அந்தப்பட்டு இருக்கிறதே அடடா! எத்தனை 'யுக காலமாக' எவ்வளவு பேர் தலைகளில் சுற்றப்பட்டு அழுக்கேறிக்கிடக்கிறது என்பது அந்த 'எம்பெருமானுக்குகூட' தெரியாது! இது பரிசுத்தத்தின் சின்னமா!

கோயில்களில் பூஜை செய்யும் புரோகிதர்கள், திருவமுது தயாரிக்கும் மடப்பள்ளி ஐயர்கள் விஷயம் எல்லாவற்றுக்கும் மேல்! ஸ்நானம் செய்து விட்டு சுத்தமாக சந்நிதியில் பிரவேசிக்க வேண்டும் என்பது விதிதான். ஆனால் அமுலில் இருக்க வேணும் என்ற அவசியம் கிடையாது! புரோகிதர்களைப் பார்த்தாலே இது புரியும்! மடப்பள்ளி ஐயர்களின் கதை சொல் லும் இது பற்றி!

பெரும்பாலான 'பட்டர்கள்' ஸ்நானம் செய்த தாக பாவலாப் பண்ணுவதில் கைகாரர்கள். உடம் பிலே பட்டை பட்டையாக விபூதி — அல்லது நாமம் — இலங்க வந்து விடுவார்கள்! அது போதும்' மற் றப்படி அவர்கள் எங்கெங்கு போயிருந்தால் என்ன, எங்கே விழுந்து கிடந்து விட்டு எழுந்து வந்திருந்தால் தான் என்ன! தங்கள் காதலியின் அணைப்பிலே கிடந் திருந்தாலும், எழுந்து சும்மா உடம்பை லேசாக அலம்பித் துடைத்து விட்டு, பட்டை நாமத்தை (அல் லது விபூதியை) பரக்கத் தீட்டி, முனங்கிக் கொண் டே வந்தால் போதாதா! 'தாசன், தாசானுதாசன்' என்று புலம்பினாலே போதுமே!

புரோகிதவர்க்கம் தயாரித்துப் பரிமாறுகிற நைவேத்தியங்களின் வண்டவாளங்களை உணர்பவர் கள் அவற்றை வாங்கி உண்ணமாட்டார்கள்! பஞ் சாமிர்தம் தயாரிப்பது, பொங்கல், தயிர்சாதங்களை வேண்டிய தளிகைகளுடன் பிசைவது போன்ற காரி யங்களை பெரிய அளவிலும் துரிதமாகவும் செய்ய வேண்டியிருப்பதால் பல கோயில்களில், அவற்றை ஐயர்கள் கால்களால் மிதித்துத் துவைத்துச் சமைக் கிறவை தான் புண்ணிய பிரசாதங்களாக பயபக்தி யுடன் வாங்கப்பட்டு பிரமாதப்படுகின்றன, இச் செயலை எண்ணும் போதே உள்ளம் குமுறுகிறது.

கோயில்களில் நைவேத்தியங்களைப் பெற்று வாயில் போட்டுக்கொண்டதும் கைகளை அங்குள்ள தூண்களில் துடைப்பது தான் பக்தர்களின் பண்பாடாக இருந்து வருகிறது. அதே தூண்களைப் பிறகு பலரும் சும்மா தொடுகிறார்கள், தட்டுகிறார்கள் தூணில் பூசப்பட்ட நைவேத்தியச் சின்னங்கள், என்னென்ன கிருமிகளின் விளைவிடமாக இருக்குமோ யாரே கூறமுடியும்? அத் தூண்களைத் தொடும் கைகள் வாயருகும். நைவேத்தியம் பெறவும் விரைகின்றன. இவை எல்லாம் தான் ஆரோக்கிய அம்சங்களா?

கோயில்களில் உள்ள புண்ணிய தெப்பக்குளங்கள் கிருமிகளின், புழுக்களின் பிறப்பிடம். அவற்றில் மக்கள் இறங்குகிறார்கள்; கை கால் சுத்தி செய்து கொள்கிறார்கள். சில புண்ணியாத்மாக்கள் ஸ்நானம் செய்து தங்கள் கட்டைக்கு மோட்சம் தேடும் புனித கைங்கர்யத்தில் ஈடுபடுவதும் உண்டு.

இவ்விதமான அறியாமைகளை வளர்க்கின்றன கோயில்கள். பகுத்தறிவு மிகுந்த இந்த யுகத்திலே அறியாமை இன்னும் வளரவிடுவது மனித தர்மமாகாது. எல்லோருக்கும் விழிப்பு உணர்ச்சி புகட்டப்பட வேண்டும்.

வீட்டிலேயே அடைபட்டுக் கிடக்கும் பெண்களுக்கும், தேகப்பயிற்சியே இல்லாத மற்றவர்களுக்கும், வசதி செய்வதற்காகத் தான் பிரகாரங்கள் ஏற்படுத்தி, பலமுறை சுற்றிவர வேண்டும் என்ற முறை ஏற்பட்டது என்று சொல்கிறார்கள். நோக்கம் நல்லது தான். ஆனால் அதை யார் அனுஷ்டிக்கிறார்கள்? கோயிலுக்குப் போகிறவர்கள் என்னவோ பெயருக்கு ஒரு தரம் வெளிப்பிரகாரத்தையும், மூன்று முறை உள் பிரகாரத்தையும் சுற்றுகிறார்கள், இதில் என்ன தேகசுகம் வந்துவிடப்போகிறது?

மேலும், பிரகாரங்கள் சுத்தமாகவா இருக்கின்றன? உட்பிரகாரங்களில்காற்றோட்டமேகிடையாது. வௌவால்களின் சிறகடிப்பும், புழுக்கை நாற்றமும் பிறவும் நிறைந்தபாதைகள் அவை, வெளிப்பிரகாரங்களோ கவனிப்பற்றதால், புல்லும் முள்ளும் குப்பையும் நிறைந்த பொட்டல்களாக உள்ளன. இவற்றை இப்படியே விட்டுவைத்திருப்பது புத்திசாலித்தனமாகாது. ஆரோக்கிய வசதிகள் என்று சொல்வதை விட, ஆரோக்கியத்தைக் குன்றச்செய்யும் அரங்குகளே ஆலயங்கள் என்று சொல்வதே மிகவும் பொருத்தமுடையது.

# 8. அந்தஸ்திற்கு முதலிடம்

கோயில்கள் ஆண்டவனின் உறைவிடம், ஆண்டவன் உயிர்க்குலத்தின் தந்தை; அவனுக்கு ஏழையும் பணக்காரனும், ஆண்டையும் அடிமையும் எல்லோரும் சமமே என்று நீளப் பேசுகிருர்கள்.

ஆனல், நடைமுறையில் ?

எல்லாம் வாய் வேதாந்தம் என்பது சகலரும் அறிந்த உண்மை. மனிதவர்க்கத்தில் ஒரு சிலரை தீண்டாதவர்கள் என்று ஒதுக்கி வைத்து, அவர்கள் ஆலயங்களுக்குள் நுழையக் கூடாது எனச் சட்டமிட்டனர்.

ஆனல், அவர்கள் வெளியே நின்று சாமி கும்பிட்டு, தேங்காய் பழம் உடைக்க முன்வந்தால் காசு வாங்கக் காத்து நிற்கிருர் ஐயர். திருவிழாக் காலங்களில் 'தீண்டாதாருக்கு' தேங்காய் பழம் 'நைவேத்தியம்' காட்டி தீபாராதனை செய்து புண்ணியம் பரிவர்த்தனை பண்ணுவதற்காக ஐயர் வெளியே சந்நிகூட்டி விடுகிருர், உண்டியல் உபகரணங்களுடன்! இப்படிப் பெறும் காசுகள் மட்டும் தீட்டுப்படாதவை போலும்!

இப்படி, வெளியே நின்று சாமி கும்பிடவேண்டும், முன் மண்டபத்தில் நின்று தரிசனம் சேவிக்க வேணும், ஐயர்கள் மட்டுமே ஆண்டவன் சந்நிதானம் வரை செல்லலாம் என்றெல்லாம் சட்டங்கள் வகுத்து பேதங்கள் வளர்த்து வருகிருர்கள்.

இதுமட்டுமல்ல, இன்னும் அந்தஸ்துக்கு ஏற்ப பேதாபேதங்கள் காட்டப்படுகின்றன கோயில்களிலே.

கோவிலுக்குள் சட்டை போட்டுக்கொண்டு செல்லக்கூடாது என்ருெரு சட்டம். கோயில் அதி

காரிகள் சட்டை நாதர்களாக அலேவார்கள். அது வேறு விஷயம்!

ஒரு சமயம் ஒரு மந்திரி ஒரு கோயிலுக்குப் போனாராம். அங்கு 'சட்டையைச் கழற்றிவிட்டுத் தான் உள்ளே போகவேண்டும்' என்ற சட்டம் கரும் பலகையில் பளிச்சிடவே, அவர் தயங்கினார். ஸூட்டும் பூட்டும் அணிந்துள்ள அவர் என்ன செய்வது? ஆனால் பேசாச்சாமிகளான கோயில் சிலேகளை விட மந்திரி சக்திவாய்ந்த சாமி என்பது அங்குள்ளவர் களுக்கு தெரியாதா, என்ன! நீங்க சும்மா போகலாம்' என்றனர், ஆனால் மந்திரி அந்தராத்மாவின் ஆக்ஞைப் படி நடக்கும் மகாத்மா காந்தியின் சிஷ்யர் தான். கோயில் அதிகாரிகள் முழித்தனர். தலையைச்சொரிந் தனர். சட்டத்தை என்ன செய்வது?

அந்த மதியூக மந்திரி ஒரு வழியும் கண்டுபிடித் தாராம். சட்டம் எழுதிய பலகையை திருப்பிப் போடும்படி — எழுத்துப் பக்கம் சுவரில் பதியும்படி, சொன்னாராம். அப்படிச் செய்ததும், சட்டம் இல்லை என்ற நினைவோடு அவர் உள்ளே போனாராம். இதை அவரது அந்தராத்மா அனுமதித்துவிட்டது! பக்த சிகாமணிகளும் அவரது உணர்வைப் பாராட்டினார் கள். மறுநாள் பத்திரிகைகள் மந்திரியாரின் ஆத்மீக உணர்வைப்பற்றி பிரமாதப்படுத்தின.

சாதாரண மனிதன் இப்படிச் செய்ய முடியுமா? 'ஏய்! சட்டையைக் கழற்று!... என்னப்பா, சட்டை யைக் கழற்றாமப் போறே?' என்ற பாணங்களல்லவா எதிர் கொண்டழைக்கும் அவனே! இவ்விதம் கட மையை உணர்த்தி ஆக்ஞைகள் செய்து வைக்கப் படும் ஆண்டவன் சன்னிதானம் உயர்ந்த அந்தஸ்து முன் மண்டியிடுகிறது.

அதே போல வேறோர் சாந்நித்தியத்திலும் சூலா மாகிவிடுகிறது! காமக்கன்னியர் முன்னிலே.

தெப்பத்திருவிழா ஒன்று தடபுடலாக நடை பெற்றது. அங்கு பக்தியைத் தவிர எல்லாம் 'தண்ணீர் பட்ட பாடுதான்'! போலீஸ் அதிகாரம் முதல் காமுகர்களின் காலித்தனம் வரை விழாக் கொண்டாடும் வேளை. தெப்பத்திலே சாமியுடன் வீண் கும்பல். புரோகிதர்கள், மேளக்காரர்கள், சவரி வீசும் தாசிகள், பெரிய மனிதர்கள், பெரிய மனுஷாள் வீட்டுப் பிள்ளைகள் இப்படி எவ்வளவோபேர்! அவர்களது உல்லாசத்திற்காகத் தானே தெப்பத்திருவிழா!

சுற்றி வந்த தெப்பம் திடீரென நின்றது, நிறுத்தப்பட்டது. ஏன்? இன்ஸ்பெக்டர் ஐயா உத்திரவு! பின் கரையிலிருந்து தெப்பத்துக்கு ஆள் ஏற வசதிகள் தடபுடலாகச் செய்யப்பட்டன. ஐயா ஒரு அழகியை கையைப் பிடித்து 'மெதுவா, மெதுவா' என்று உபசரித்து தெப்பத்தில் இறக்குமதி செய்தார். அவள் யார்? பக்கத்து ஊர் தாசி.

பின் என்ன! பக்தியாவது கடவுளாவது! பேசும் தெய்வங்களான இந்த அந்தஸ்துத் தேவதைகளுக்கு இல்லாத கோயிலும் திருவிழாவும் யாருக்கு ஐயா வேண்டும்!

இத்தகைய கோயில்களிலே மணியடித்து, ஏதோ முனங்கி, காசு பெற்று வயிறு வளர்க்கும் புரோகிதர்கள் தாங்களே தெய்வங்கள் என்ற நம்பிக்கையில் உயிர் வாழ்கிறார்கள். அவர்களது உயர்ந்த மனோபாவம் அவர்கள் போக்கிலே நன்கு புலனாகும். சில கோயில்களில் அவர்களது செயல்களிலே நன்கு பிரதிபலிக்கும்.

திருவனந்தபுரம் கோயிலில் பூசாரிகள் தங்களை அவதாரங்கள் என்று நம்பிக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது. பிராமணரல்லாதாருக்கு விபூதிப் பிரசாதத்தைக் கையிலே கொடுப்பதில்லை. அந்தக் கோயிலின் சம்பிரதாயங்களை அறியாத அயலூர் வாசிகள் பணிவாகக் கைகளை நீட்டினால்கூட, கீழே விபூதி வகையறுக்களை விட்டெறிவதுதான் அங்குள்ள பட்டர்களின் பண்பாயிருக்கிறது.

இத்தகைய திமிர் தண்டிகள் தலைகொழுத்துத் திரியும் இடங்கள் தான் ஆண்டவன் 'திருக்கோயில்கள்!

# 9 'செம்பைச் சோதி' 'சடையைச் சோதிகள்!!'

சடைமுடித் தம்பிரான் ஒருவர் கோயிலுக்குப் போனார். அவருக்கு பக்தியை விட. பசி அதிகம். கோயிலில் யாருமில்லை. சாமி முன்னால் வெற்றிலை பாக்குப் பழங்கள் எல்லாம் இருந்தன. பார்த்தார் சடைமுடியார் நாக்கிலே தண்ணீர் சொட்டியது. துணிந்து, இரண்டு பழங்களை அபேஸ் செய்து ஜடா பாரத்திலே ஐக்கியமாக்கிக்கொண்டு, பிரகாரபவனி வரத்தொடங்கினார்.

அதே வேளையில் வயிற்றுப் பிரானது குரலுக்கு செவிசாய்த்த பரதேசி ஒருவர் வைரவன் கழுத்திலே கிடந்த வடைமாலையை அமுக்கி தனது கைச் செம் செம்பிலே அடக்கம் செய்து திரும்பினார். அவர் பார்வையில் தம்பிரான் விழுந்ததும். தம்பிரான் தன்னை கவனித்திருப்பாரோ என்ற அச்சம் பரதேசிக்கு. பரதேசி ஒரு வேளை தன்னைப் பார்த்திருக் கலாமோ என்று தம்பிரானின் கள்ளநெஞ்சு துள்ளி, யது. அதை அடக்க பக்தி பஜனையை பலமாகப் போட்டார் தம்பிரான். வைரவன் முன்னின்று கன்னத்தில் போட்டுக் கொண்டார். 'அரோகரா, செம் போசோதி!' என நாம சங்கீர்த்தனம் பாடினார்.

ஆனால் பரதேசி தவறுதலாக வியாக்யானம் செய்துகொண்டார். தனது செம்பைச் சோதிக்கும் படி கிண்டல் செய்கிறார் என எண்ணிய பரதேசிக்கு தம்பிரானின் குட்டு தெரியும். ஆகவே 'அரகரா தம்பிரான் சடையச் சோதி!' என எதிர் வேட்டு போட்டார்.

இப்படி சுலோகக் கூச்சல் எவ்வ. பரஸ்பரம் கைகலப்பு ஏற்பட அங்கு வந்தவர்கள், உண்மையை

அறிந்து உதைகொடுத்தார்கள் என்பது நாடோடிக் கதை. பக்த சிகாமணிகளின் வண்டவாளத்தை அம்பலப்படுத்த வந்த அருமையான கதை.

பார்க்கப்போனால் இன்றையத் திருக்கோயில்களிலே 'செம்பைச் சோதி'களும் 'சடையைச் சோதி'களும் தான் பெருத்துப்போனார்கள். 'சிந்தையில் கள் விரும்பி சிவ சிவ என்றிருக்கும்' ருத்திராட்ச பூனைகள் கொழுக்க வகைசெய்யும் இடங்களாக விளங்குகின்றன கோயில்கள். இக்கோயில் பூனைகள் செய்கின்ற எத்து விளையாடல்கள் அற்புதமானவை, பயங்கரமானவை.

கோயில் நகைகளை விற்று தம் வயிற்றுச் சாமிக்கு பூசைபோடுவோரும் அம்பிகையின் கழுத்தை அழகு செய்ய வந்த நகைகளால் தம் காமக்கிழத்திகளை அணிசெய்து அகம் மகிழும் தர்மகர்த்தாக்களும் பூசாரிகளும் உண்டு. கடவுள் பெயருக்கு உள்ள நிலங்களின் பட்டாவை அதே பெயருள்ள தமக்கு உரிமையாக்கி, கடவுளுக்கே நாமம் இட்டிய தர்மகர்த்தாக்கள் சிலர். அம்பிகைக்கு பக்தர்கள் சாத்துகிற பூந்துகிலை உரிந்துவிட்டு, கந்தலைப் போர்த்து. புத்தாடையை தனது மனைவிக்கோ மகளுக்கோ சாத்துகிற புரோகிதர்கள் பலர். மலர் மாலைகளை ஆசையுடன் ஒளித்துக் கொண்டுபோய் தாசிக்குச் சூட்டி சதைப் பசியைத் தணித்துக் கொள்கிற பலர் இன்றையக் கோயில் புரோகிதர்கள்.

தாங்கள் வயிறு வளர்க்க மற்றவர்களை ஏமாற்றும் புரோகிதர்கள் கடவுளையும் ஏமாற்றத் தயங்குவதில்லை! நைவேத்தியத்திற்கு வரும் அரிசி, காய்கறி, நெய், பால் முதலியவற்றை வீட்டுக்கு அனுப்பிவிட்டு சிலைக்கு வெந்நீரில் முக்கி எடுத்த — ஆவி பறக்கிற— தாய்புக்கயிற்றையோ. ஈரவேஷ்டியால் மூடிய செம்

கல்லேயோ காட்டி பூஜை பண்ணுகிறவர்களும் இருக்கிறார்கள்,

இவற்றுக்கெல்லாம் மேலாக, கோயில் விக்கிரகத்தையே விற்றுவிடும் பக்தர்கள் இருப்பதாக விஷயமறிந்தவர்கள் சொல்கிறார்கள்.

ஆகவே, கோயிலில் வேலேபார்ப்பவர்கள் கடவுள் நம்பிக்கையாலோ. பயபக்தியாலோ உந்தப்பட்டு சேவை புரியவில்லே. வயிறு வளர்க்கவும், ஏமாந்தவர்கள் தலேயைத் தடவவும் வாழ்கிறார்கள், இப்படி நாமம் போடும் கலேயில் கைவந்த இவர்கள் திருக்கோயிலின் திருத் தெய்வங்கள் தலேயிலும் கைவைத்து கடவுளேயே ஏமாந்த சோணகிரியாக்கி விடுகிறார்கள்!

அப்புறம் கடவுள், கோயில், பக்தி என்றெல்லாம் அளப்பதன் அர்த்தம் என்ன? ஏமாற்றுக்காரர்களும், சுரண்டும் வர்க்கத்திலரும், திருடர்களும் ஓங்கி வளர வகைகாட்டுவதன்றி வேறு என்ன தான் சாதிக்கின்றன இன்றையக் கோயில்கள்?

---



---

# 10. கடவுளின் பெயரால்

ஒரு சமயம் எனது நண்பர்கள் சிலருடன் நானும் ஒரு கோயிலுக்குப் போயிருந்தேன். சாமி கும்பிடுவதற்காக அல்ல. சரித்திரச்சுவடுகள் சில அந்தக் கோயிலிலும், அக்கோயில் உள்ள கிராமத்திலும் காணக்கிடக்கின்றன என்று கேள்விப்பட்டதால் தான்.

பிரதான நகரிலிருந்து, நகரமும் பட்டிக்காடுமல்லாத 'ரெண்டுங்கெட்டான்' ஊர் ஒன்றுக்குச் செல்லும் ரஸ்தாவிலிருந்து சிறிது விலகியிருக்கிறது அந்தக் கிராமம். அவ்வூர்க் கோயிலைவிட, அவ்வூரில் வாழ்கின்ற 'தொழில் செய்யும் யுவதிகள்' அந்தக் கிராமத்துக்கு பெயர் வாங்கித் தந்திருக்கிறார்கள் என்பதும் குறிப்பிட வேண்டிய விஷயம்.

நாங்கள் அங்கு சென்ற தினம் பஞ்சாங்கப்படி ஏதோ புண்ணிய நாள். மத்தியானம் பூஜை கொஞ்சம் தடபுடலாகவே நடைபெற்றது. பூஜை முடிந்ததும் புரோகிதர்கள் கும்பலாக நின்று கூச்சல்போட ஆரம்பித்தார்கள். சண்டை கூட எழுந்தது. தேவதாசிகளும் கூப்பாடு போடுவதில் பங்கெடுத்துக் கொண்டனர். மேளதாளக்காரர்களும் முணமுணத்தார்கள்.

விசாரித்ததில், சண்டை யெல்லாம் தோசைப் பங்கிடு காரணமாகத்தான் என்று தெரிந்தது! அன்று விசேஷ தினமாகையால், பெருமாளுக்கு நைவேத்தியம் தோசைகள். அவற்றை ஐயங்கார்கள் பங்கிடு செய்வதில் 'உமக்கு ரெண்டு... உமக்கு ஒன்றரை' என்று கணக்கு பேதமும் அபிப்பிராய பேதமுமாக வீண் ரகளை ஏற்பட்டுவிட்டது.

இப்படித் தான் அடிக்கடி 'யுத்தம்' நிகழும் என அறிந்தோம். உலகம் முன்னேறுவதும், விஞ்ஞான வளர்ச்சி பெறுவதும், மகாயுத்தத்தில் ஈடுபடுவதும்; பஞ்சம் பயமும் பற்றி இவர்களுக்குத் தெரியாது. தெரிய வேண்டும் என்ற கவலையும் கிடையாது. என்னவோ கடவுள் பெயரைச் சொல்லிக் கொண்டு 'உண்டக்கட்டி'க்கும் உப்பில்லாத் தோசைக்கும் சண்டைபோட்டு பிரமாதப்படுத்துகின்றார்கள். கடவுள் பெயரைச் சொல்லி, கடவுளுக்கு என விடப்பட்டுள்ள மான்ய நிலங்களின் வருவாயைச் சுரண்டி வயிறு வளர்க்கிறார்கள். இவர்கள் வயிறு வஞ்சகமில்லாமல் குண்டோதரச் சின்னங்களாகப் பெருத்துள்ளன. உண்மையாக உடலோய உழைக்கின்ற தொழிலாளி செத்துக்கொண்டிருக்கும் காலத்திலே கடவுள் பெயரால் குண்டோதரர்களாகவும் காமகர்த்தாக்களாகவும் வாழ்ந்து வருகிறார்கள் பலர். இது மனித குலத்துக்கே செய்யப்படும் மகத்தான துரோகமாகும்.

இது ஒரு கிராமத்திலே மட்டும் நடப்பதல்ல, கோயில்கள் உள்ள இடங்களில் எல்லாம் நடப்பது இதுதான்.

உழைப்போர் உணவு உரிமைக்காக, சுதந்திர உரிமைக்காகப் போராடுகின்ற நாட்களிலே சுரண்டி உடல் கொழுக்கும் சிறு கும்பல் யாருக்கு முதல் தீர்த்தபரிமாற்றம் என்றும், யானைக்கு 'யு நாமம்' போடுவதா 'வி'நாமம் போடுவதா என்றும் போரிட்டு' பணத்தை நாசமாக்கி வந்துள்ளது.

கல்லுடைப்போரும், ஆலைகளிலே அல்லாடுவோரும் யந்திரங்களோடு யந்திரங்களாய் இரவென்

றும் பகலென்றும் உழைக்க — சமூகத்தின் முக்கால் வாசிப்பேர் அரை வயிற்றுக்குப் போதுமான ஆகாரம் கூட. தேவையான ஆடைகள் கூட இல்லாமல் தவிக்க ஒரு சிலர் கல்லுக்கு ஆடைகளும் நகைகளும் பாலாபிஷேகமும் புஷ்பமாலைகளும் செய்து பொருளை நாசமாக்கி, கடவுள் பெயரால் தாங்கள் உடல் கொழுப்பது தான் நியாதியா என்று கேட்கிறேன்.

கடவுள் பெயரால் நடைபெறும் அக்கிரமங்கள் கணக்கில. தேர் என்றும் திருவிழாக்கள் என்றும் ஆர்ப்பாட்டம் செய்யப் படுவதால் எவ்வளவு நஷ்டம் ஏற்படுகிறது என்பதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

ஒரு பிரதான நகரின் தேர்த்திருவிழா அன்று ஒவ்வொரு வருஷமும் இரண்டு மூன்று பேர் மரணமடைவதுண்டு, பல பேர் காயமுறுவது உண்டு. பொருள் நஷ்டத்துடன் உயிர் நஷ்டமும் ஏற்படும் விழிப்புறுத மக்களின் மடமையை எண்ணி அனுதாபம் தான் அறிவிக்கவேண்டியதாகிறது.

திருவிழாக் காலங்களில் வாண வேடிக்கைகளும் ஆடம்பரங்களும் டம்பச் செலவுகளும் பொருளாதாரத்தைப் பாதிக்கும் விஷயங்கள். இவை கட்டுப் படுத்தப்படவேண்டும்,

இன்னும் சில இடங்களில் அறியாமை கடவுள் பெயரைச் சொல்லி தாண்டவமாடி அனர்த்தம் விளைவிக்கிறது,

ஒரு கோயில் வழக்கம், அத்தெய்வத்தின் சக்தியைபிரத்தியட்சமாய்நிரூபிப்பது! அதற்காக, கோயிலின் முன்னால் உள்ள பந்தலின் மூலையிலே பூசாரி

தீ வைப்பது வழக்கம். தீயை வைத்துவிட்டு கடவுள் பெயரைச் சொல்லி விபூதியும் தீர்த்தமும் தெளிப்பான் பூசாரி, தீ 'கப்'பென்று அணைந்துவிடுமாம். அது மரபு.

அந்த வருஷம் பூசாரி தீ வைத்தான். விபூதியை அள்ளிப் போட்டான். தீ அணையவில்லை. பந்தலைச் செந்தீ நாக்குகள் சுவையாக நக்கின. மேலே மேலே எவ்வியது தீ, எங்கும் புகை, உள்ளே பெரும் கும்பல் துர்ப்பாக்கியம்! — அந்தப் பந்தலைச் சுற்றிமண்சுவர் குறுகலான சிறு வாசல் ஒன்று தான். பந்தலுக்கு வெளியேயும் கும்பல்,

தீ பந்தலைச் சூறையாடுகிறது என்பதை உணரவே கொஞ்சம் நேரமாகிவிட்டது. உணர்ந்ததும் என்ன செய்வதென்று தெரியாமல் கூவத்தான் முடிந்தது மக்களால், முட்டிமோதி வெளியே வரமுடிந்தது சிலரால் தான். நூற்றுக்கணக்கான பேர் தீக்கு இரையானார்கள். எல்லாம் கடவுள் பெயரால் நிகழ்ந்த மடத்தனமான செயல் காரணமாக!

இதே போல அர்த்தமற்ற சடங்கு 'சொக்கப் பனை' கொளுத்துவது. பூசாரி பனையின் மேலே ஏறி தீபாராதனை காட்டிவிட்டு இறங்கி வருவதற்குள்' ஆர்வமும் துடிதுடிப்பும் உள்ள வாண்டுப்பயல்கள் ஓலைக்கு தீ வைத்துவிடுவது உண்டு. ஐயர் அலறி அலறிப் புடைத்துக்கொண்டு கீழே விழுந்து உயிர் தப்புவார் - காயங்களுடன், ஒன்றிரண்டு சந்தர்ப்பங்களில் 'அக்னியே ஸ்வாஹா!' ஆகியிருக்கிறார்கள் பூசாரிகள். எல்லாம் கடவுள் பெயரால் நிகழ்கின்ற மடச்செயல்கள் காரணமாக.

கடவுள் பெயரால் நாட்டிலே கண்மூடித்தனமான காரியங்கள் செய்யப்படுகின்றன. கொள்ளை

கொள்ளையாக நகைகள் குவிக்கப்படுகின்றன சிலைகளுக்கு. நிலங்கள் எழுதி வைக்கப்படுகின்றன கோயில்களுக்கு. உழைப்பைச் சுரண்டி வளர்கின்ற முதலாளிவர்க்கத்தைப் போல ஏழைகள் வயிற்றிலடித்துப் பணக்காரச் சாமிகளாகின்றன சிலைகள்!

ஓர்புறம் தரித்திரம் தாண்டவமாடுகிறது. பஞ்சமும் பசியும் பட்டினியும் ஆடையில்லாமையும் கடன் சுமையும் ஓர் புறம். ஆனால் கல்லுக்கு மாலைகள் மரியாதைகள் பட்டு பீதாம்பரங்கள், தங்க நகைகள், கிரீடங்கள், நிலங்கள்!

ஓர் புறம் தலையிலே வெயில் சுட. இளகிய தார் காலைக் கொறிக்கச் செய்ய, பசித்தீ வயிற்றை எரிக்க மனிதரை மனிதன் இழுக்கிறான். மூட்டை தூக்கும் சுமைதாங்கியாகிறான், கண் குழிவிழ, உடல் சோர உழைக்கிறான். காலுக்குச் செருப்பில்லை. குடையில்லை, நடக்க முடியாது நடக்கிறான், அதே வேளையில். செப்புக்கட்டிச் சிலைகளுக்கு சிங்க, நாக, கருட, அனும, யானை, புன்னை வாகனங்கள்! முத்துப் பல்லக்குகள்! பூம்பல்லக்குகள், சப்பரங்கள்! ஆடம்பரமான தேர்கள்!

ஒரு புறம் மனிதர் கஞ்சியில்லாது தவிக்கிறார்கள், கஞ்சியிருந்தாலும் ஓட்டையில்லாப் பாத்திரம் கிடையாது. தகரக் குவளையும், ஓட்டைத் தட்டும், மண் சட்டியும் அவர்களுக்கு. மறுபுறம் கல்களுக்கு வெள்ளிப் பாத்திரங்கள், தங்கக் கிண்ணங்கள். வெள்ளித் தாம்பாளங்கள்!

படுக்கப் பாய் கிடையாது. இருக்க இடம் கிடையாது. மழைக்கு ஒதுங்க வீடு கிடையாது. வீடிருந்தாலும் ஓட்டை ரிப்பேர் செய்ய காசில்லை, ரோட்டை

யும் மரத்தடியையும் நம்பி வாழ்வோர் பலர். இப்படி எண்ணற்றோர் அல்லலுறும் காட்சி ஒரு பக்கம். அதே வேளையில், கல்லுக்கும் செம்புக்கும் பாலாபிஷேகம்! அன்னப் பாவாடை! மலர் மாலைகள், தங்க அங்கிகள். மாடமும் மதில்களும் கோபுரமும் கொண்ட ஆலயங்கள்! கட்டில்கள், மெத்தைகள், கண்ணாடிகள்!

அநியாயம், அநியாயம்!

எல்லாம் கடவுள் பெயரால்!

சம்பளம் காணாது என்று உரிமைப் போர் தொடுக்கும் தொழிலாளர் பற்றிய செய்தி, யுத்தத்தின் விளைவுகள், பஞ்சக் கொடுமைகள் முதலியவற்றை கூறும் செய்திகள் பக்கத்திலேயே படித்தோம் திருப்பதிச்சாமிக்கு பெருஞ் செலவில் வைர மாலை சாற்றிய கதையை. இன்னும் படிக்கிறோம்.

ஆகாரங்கள் இல்லை, ஆடைகள் இல்லை என்ற கூச்சலைக் கேட்கும் காலத்திலேயே, ஆதீனங்களும் மடாதிபதிகளும் பணக்காரர்களும் கறுப்பு மார்க்கட் கயவர்களும் கல்லுக்கும் செம்புக்கும் அபிஷேகம் செய்து ஆடம்பரப்படுத்தும் அநாகரிக முழக்கத்தையும் கேட்கிறோம்.

எல்லாம் கடவுள் பெயரால்! மனிதர்களிடையே மனிதர்கள் சாக, கண்ணிருந்தும் காணாத, உள்ளமிருந்தும் உணரமுடியாத மனிதப் பதர்கள் கல்லையும் செம்பையும் கட்டி மாரடிக்கிற இழி செயலைக் காண்கிறோம். எல்லாம் கடவுள் பெயரால்!

'அயலாரை நேசிப்பது, தெய்வத்துக்குச் செய்கிற உயரிய பூஜையாகும்' யாவருக்கும் எளிது பசுவுக்கு

புல் தருவது; யாவருக்கும் எளிது பசியுடனிருப்போருக்கு உணவு தருவது 'கோயில் முழுதுங் கண்டேன் உயர் கோபுரங் கண்டேன். இறைவனைக் கண்டேனில்லை', 'கடவுள் எங்கிருக்கிறார்? சகோதர ஜீவன்களிடையே; ஏழைகள் நடுவிலும் துயருறுவோரிடையிலும்' என்றெல்லாம் புத்தகங்களும் பிரசங்கிகளும் புலம்புகின்ற காலத்திலே அறியாமையும் அநாசாரமும் மிருகத்தனமும் போஷிக்கப்பட்டு வருகின்றன. அனைத்தும் கடவுள் பெயரால்!

இந்த நிலை இன்னும் நீடிக்கக்கூடாது. மனிதர் அனைவரும் மனிதராக வாழவேண்டும். வாழ உரிமை உண்டு. அவர்கள் மண்ணல்ல மரமல்ல. மண்ணுக்கும் மரத்துக்கும் கல்லுக்கும் உலோகங்களுக்கும் மதிப்பும் படாடோபமும் காட்டப்படும்போது மனிதர்கள் பொட்டுப் பூச்சிகளாய் கருதப்படுவது இழிவிலும் இழிவு. மனிதவர்க்கத்துக்கே மகத்தான கேவலம்.

இத்தகைய துரோகச் செயல் இந்த நிலையிலாவது மட்டம் தட்டப்படவேணும். அதற்குரிய திட்டங்கள் வகுக்கப்படுவதுடன், செயலாற்றப்படவும் வேண்டும். இது அவசர அவசியமான காரியம். மனித வாழ்வுக்கு சுபிட்சம் விளைவிப்பதும் கூட.



# 11. கோயில்களை மூடுங்கள்!

மனித வர்க்கம் உயர் நிலை அடையவேண்டுமானால் கடவுள் பெயரால் நடைபெறும் அக்கிரமங்கள் ஒழியவேண்டும்.

மனிதரின் வாழ்வு நிலை சிறப்புறவேண்டுமானால் பொருளாதாரப் புனரமைப்பு தேவை. அதற்கு முக்கியமானது மதத்தின் பெயராலும், கடவுள் பெயராலும் பொருள்களை நாசப்படுத்துவதும் தேக்கிவைத்திருப்பதும் அடக்கப்படுதல்.

மனிதர் வசிக்க, வாழ்வை உயர்த்த வகை செய்யவேண்டுமானால், கோயில்களையும், அவற்றைச் சேர்ந்த நிலங்கள், நகைகள் முதலியவற்றையும், வீணாக்கப்படும் மனித சக்தியையும் நல்ல முறையில் பயன்படுத்தவேண்டும்.

இவற்றுக்காகத்தான் 'கோயில்களை மூடுங்கள்' என்று சொல்லுகிறேன்.

கோயில்களை மூடுங்கள் என்று சொல்லும்போது அறியாமையை வளர்க்கும் கள்ளத்தனத்திற்கும் அகந்தைக்கும் காம வளர்ச்சிக்கும் வகை செய்கிற காரிருள் நிலையங்களை மூடுங்கள் என்றுதான் குறிக்கிறேன்.

கோயில்களை மூடுங்கள் என்று சொல்லும்போது, சுரண்டலுக்கும் சில சதைப் பிண்டங்கள் கொழுப்பேறித் திமிரடையவும், பலர் அவதியுறவும் மூலகாரணமாயிருக்கின்ற கற்சிலைகள் வைக்கும் கர்ப்பக்கிருகங்களை அடையுங்கள் என்றுதான் சிபார்சு செய்கிறேன்.

கோயில்களை மூடுங்கள் என்று சொல்லும் போது. ஆடம்பரச் செலவுகள், பகட்டுகள் படாடோபங்கள், அர்த்தமற்ற காரியங்கள். அநாசாரங்கள், ஆரோக்கிய பாதகங்கள் முதலியவற்றைவளர்க்கின்ற கற்கோட்டைகளுக்குக் கதவடையுங்கள் என்று தான் எழுதுகிறேன்.

கோயில்களை மூடுங்கள் என்று சொல்லும் போது, சமூகத்திலே ஒரு சிலர் புண்ணியவான்களெனவும் பெரும்பாலோர் பாபிகளெனவும் சொல்லி வயிறு வளர்க்கும் சமூகக் காளான்களுக்கும். அப் புல்லுருவிகள் செழிக்க வகைசெய்யும் இடங்களுக்கும் சாவுமணி அடியுங்கள் என்றே கூறுகிறேன்.

கோயில்களை மூடுங்கள் என்று சொல்லும் போது. கடவுள் பெயரால் நடைபெறுகிற, மனிதர்கள் மனிதராக வாழ்வதற்கு பாதகமாய் நிற்கின்ற, இருள் வெளிகளுக்கு சமாதி கட்டுங்கள் என்றுதான் சாற்றுகிறேன்.

கட்டிடங்களை இடிக்கச் சொல்லவில்லை. சிலைகளை உடைக்கச் சொல்லவில்லை. வாகனங்களுக்கும் ஆடம்பர அலங்காரப் பொருள்களுக்கும் தீயிடச் சொல்லவில்லை.நகைகளையும் நிலங்களையும் கொள்ளையிடச் சொல்லவில்லை.

அவற்றை மனிதசமுதாய நலனுக்கு ஏற்ப பயன் படுத்த வேண்டும் என்று தான் சொல்கிறேன். கோயில் கட்டிடங்கள் வேறு வகையில் பயன்படும், நகைகளும், நிலமும், ஸ்தாவர ஜங்கம சொத்துகளும் சமூக வளர்ச்சிக்கு ஆவன செய்ய உதவும் மூலதனமாக்கப்படவேண்டும்.

எவ்வளவோ வகையில் பயன்படுத்தலாம். எப்படி எப்படிப் பயன்படுத்தவேண்டும் என்பதை வரையறுத்து, திறமையாளர்கள் செயலாற்ற வேண்டும், அரசாங்கம் அதற்கு வகை செய்யவேண்டும்.

# 12. என்ன செய்யலாம்

கர்ப்பக்கிரகங்களை மூடிவிட்டு, கடவுள் பெயரால் நிலவும் அறியாமை, அநாசார, அகங்கார, ஆடம்பர அநாவசியங்களுக்கு சமாதி கட்டி விட்டு, என்னென்ன செய்யமுடியும் என்பதை யோசித்துப் பார்த்தால்.........

கோயில்கள் பெரியபெரிய கட்டிடங்களாக உள்ளன. அவற்றிலே தொழிற்சாலைகளும் பயிற்சிக் கூடங்களும் அமைக்கலாம். தொழிற்சாலைகள் வைக்க கோயில் நகைகள் நிலம் மூலம் வரும் வருவாய் ஆகியவற்றை பயன் படுத்தலாம்.

இவ்விதம் ஆலைகளும், கூடங்களும் சமைப்பதன் மூலம் வேலையற்ற எண்ணற்றோருக்கு வேலை கொடுக்க முடியும்.

கோயில் நிலங்களை பொதுவாக்கி, பயிரிடுவோருக்கு பகிர்ந்து அளித்துக் கண்காணிப்பு நடத்தலாம்.

பயிர் செய்யப்படாமல் புறம்போக்குகளாகவும், தரிசுகளாகவும், வெறும் தோட்டங்களாகவும் கிடக்கும் இடங்களில் மண்ணுக்குத் தக்கபடி ஏற்ற பயிர்களை சாகுபடி செய்யலாம். பழமரங்களை அபிவிருத்தி பண்ணலாம்.

பொட்டலாகக் கிடக்கின்ற கோயில் பிரகாரங்களை நந்தவனங்களாகவும், காய்கறித்தோட்டங்களாகவும் மாற்றலாம்.

இப்படிப் பலரகமான தொழில்களைப் பேணுவதால் எவ்வளவோ உழைப்பாளிகளுக்கு வேலையும் அதன் மூலம் வாழ வழியும் கொடுக்க முடியும்.

இருக்க இடமின்றித் திண்டாடுகின்ற மக்களுக்கு சிறுசிறு அறைகளாகத் தடுத்து வசதிகாட்டப் பயன்படும் ஆயிரக்கால் மண்டபங்களும் பிறவும் காற்று வசதிகளுக்கும், வெளிச்சத்திற்கும் வகை செய்து உட்பிரகாரங்களையும், உள் மண்டபங்களையும் சிறுசிறு வீடுகளாகவும், வசிக்கும் அறைகளாகவும் மாற்றலாம்.

முன் மண்டபங்களை பொதுஜன நன்மைக்குப் பயன்படும் 'டவுன் ஹால்கள்' ஆகவும், அறிவுவளர்ச்சிக்கு உபயோகப்படும் சொற்பொழிவு மேடைகளாகவும், நாடக அரங்குகளாகவும் மாற்றலாம்,

---

# 13. உள்ளத்தில் உள்ளானடி

கவிஞர் தேசிகவிநாயகம் பிள்ளையின் கவிதைகளில் ஒன்று. இரண்டு தோழிகள் கோயிலுக்குப் போனார்கள். பிரகாரம் சுற்றினார்கள். தேங்காய் பழம் தீபாராதனை செய்தார்கள். வெளியே வந்தார்கள்.

அவர்களில் ஒருத்திக்கு சந்தேகம் எழுந்தது. 'இவ்வளவெல்லாம் செய்தோமே! இதனால் என்ன கண்டோம்? கடவுளைக் கூடப் பார்க்கமுடியவில்லையே!' என்று மனம் குறுகுறுக்கது. தோழியிடம் சொன்னாள் 'கோபுரத்தைப் பார்த்தேன். விக்கிரகத்தைக் கண்டேன். அதைப் பார்த்தேன். இதைப்பார்த்தேன் என அடுக்கிவிட்டு 'ஆனால் கடவுளைக் கண்டிலனே' என முடிக்கிறாள்.

தோழி புன்னகை புரிந்து சொல்கிறாள் 'அடீ! கடவுள் அங்கெல்லாம் இல்லை. உள்ளத்தில் உள்ளானடி!' என்று.

அழகான தத்துவம். கடவுளைக் காண கோயில்கள் கோபுரங்கள், மாடங்கள், தடபுடல்கள் தேவையில்லை. 'கனமா மணி சேகண்டி யெல்லாம் கணகணவென முழக்கிப் பண்ணிடும் பூசையாலே பயனில்லை' என்று அதே கவிஞர் உறுதி கூறுகிறார்.

கோயில்களையும் பூஜையையும் குறைகூறும் திருமூலர் மனிதர்கள் தான் 'நடமாடும் கோயில்கள்' எனக் குறிக்கிறார்.

அறிஞர்களெல்லோரும் ஆண்டவனை தங்களிடையே தங்கள் சகோதரர்களிடையே — சகோதரர்

களாகவே — கண்டார்கள், கோயில் சிலைகளாகக் காணவில்லை.

விவேகானந்தரும், தாகூரும் போதிப்பது இதைத் தான். மக்கட்குலத்துக்கு சேவை செய்வதே பக்தி' அதுவே சரியான வழிபாடு. அதுவே ஆண்டவனை (அப்படி ஒருவன் இருந்திருந்தால்!) திருப்தி செய்யும் சரியான மார்க்கம்.

ஆங்கிலப் பாடல் ஒன்று மிகப்பிரசித்தமானது:

அபூபென் ஆடம் என்பவன் ஒரு நாள் துயில் கலைந்து எழுந்த போது, காரிருளிடையே பொன் ெனாளி சிதறி அமர்ந்திருந்த தேவன் ஒருவனைக் கண் டான். அத் தேவன் எதுவோ எழுதிக்கொண்டிருந் தான். 'நீ என்ன எழுதுகிறாய்?' என்று கேட்டான் அபூ.

'கடவுளிடம் பக்தி காட்டும் மனிதர் பெயர்களை எழுதிவைக்கிறேன்' என்றான் தேவன்,

அபூ ஆவலாக 'அப்படியா? என் பெயர் உன் பட்டியலில் இருக்கிறதா' என்று கேட்டான்.

'இல்லை' எனத் தலையசைத்தான் தேவன்.

'அப்படியானால், அயலாரிடம் — மனித வர்க்கத் திடம் — அன்பு காட்டுகிறவர்கள் பெயருடன் என் பெயரையும் எழுது' என்றான் அபூ. தேவனும் அப் படியே எழுதிக்கொண்டு மறைந்தான்.

மறுநாள் இரவிலும் விழித்தான் அபூ. மின் ெனாளிப் புன்னகை சிதறும் தேவன் வந்திருந்தான். அவன் ஒரு பட்டியலைக் காட்டினான். அதில் அபூ பென் ஆடம் பெயர் முதலாவதாக மிளிர்ந்தது. அந்த

'லிஸ்ட்' ஆண்டவனால் விரும்பப்படுகிற மனிதர்களின் பெயர் வரிசை.

இந்தக் கதை என்ன சொல்கிறது என்றால், மனிதர்களை சகோதரர்களாகக் கருதி அன்பு செலுத்துகிறவர்கள் கடவுளிடம் பக்தி காட்டுகிறவர்களை விடச் சிறந்தவர்கள்; அவர்களே போற்றுதலுக்குரியவர்கள் என்று தான்.

ஆகவே: கடவுள் பெயரால் கல்சிலைகள், செப்புக்கட்டிகள், சீனக்களிமண் உருவங்கள், படங்கள் முன் விழுந்து கும்பிடுவதைவிட, மனிதர்களுக்கு உதவி புரிவதே தெய்வீகமான காரியம். மக்களுக்கும் – உதவிசெய்யப் பெறுகிறவர்களுக்கும் – செய்கிறவர்களுக்கும் ஆனந்தம் தரும் காரியமாகும். புத்தியுள்ளவர்கள் செய்யும் காரியமும் கூட.

இப்படியெல்லாம் சொல்கிறவனை நாஸ்திகன் எனச் சொல்லலாம். பரவாயில்லை! சுயநலத்துக்காக கண்மூடித்தனமாக கல்களுக்கும், கல்கள் அடைபட்டுக் கிடக்கும் காராக்கிரகங்களான கோயில்களுக்கும் பணம் அள்ளிக் கொட்டிவிட்டு மனோதிருப்தியோ, பலனோ பெறாத பக்த சிகாமணிகளை விட மனிதகுல நலனுக்காக, மனிதமுன்னேற்றத்துக்காக, மனிதர் மனிதராக வாழவகை செய்வதற்காகவாழ்கிற, உழைக்கிற நாஸ்திகர்களே உயர்ந்தவர்கள், அவர்களே சிறந்த மனிதர்கள். அவர்கள் சிந்தனையாளர்கள்.

ஒரு அன்பர் சரியாக எழுதினார்: 'நாஸ்திகர்கள் கோயிலில் கடவுளைக் காணவில்லை. ஆனால் மனிதர்களிடையே காண்கிறார்கள், ஒவ்வொரு மனிதனையுமே கடவுளாகக் கருதுகிறார்கள். அதனால் மனித

ருக்கு தீங்கு செய்ய அஞ்சுகிறார்கள். எல்லோரிடமும் அன்பு காட்டுகிறார்கள்.'

ஆனால், கல்லை வழிபடும் பக்த சிகாமணிகளின் இதயமும் கல்லாகவே மாறிவிடுகிறது!

பேரறிஞனை — பெரிய நாஸ்திகன் எனப் பிறரால் அழைக்கப்பட்ட — இங்கர்சால் சொன்னான்: 'மனிதவர்க்கமே எனது கடவுள். மனித சேவையே எனது மதம்.

சிறந்த சிந்தனையாளனான இங்கர்சாலின் கூற்றையே எனது லட்சிய சுலோகமாகக் கொள்வதில் நான் பெருமை அடைகிறேன். ஒவ்வொருவரும் அதையே வேதவாக்காகக் கொண்டால் மனித சமுதாயம் உயர் நிலை அடையும் என்பதில் ஐயம் கிடையாது. 'இந்திரனார் உலகிலே இன்பம் இருக்குது' என்பது பொய். எல்லோரும் கனவு காண்கிற அந் நல்லின்பத்தை' நாம் இங்கே, இந்த மண்ணுலகிலே, அனுபவிக்கலாம்.

---

